# அருள்மிகு ஸ்ரீ பாதாள பொன்னியம்மன்

(புரசைவாக்கம்) ஆலய ஸ்தல வரலாறும்,
ஆனந்த வாழ்வளிக்கும் வழிகள் மற்றும்
பாராயணப் பாடல்களும்



நாள் 26-01-1999
வெளியீடு : ஆன்மீக வழிபாட்டுக்குழு
அசோக் லேலண்ட், எண்ணூர்,
சென்னை - 600 057.

# தியானம்

நீர் உண்டு, பொழிகின்ற கார்உண்டு, விளைகின்ற
நிலன்உண்டு, பலனும்உண்டு,
நிதிஉண்டு துதிஉண்டு, மதிஉண்டு, கதிகொண்ட
நெறி உண்டு, நிலையும் உண்டு,
ஊர்உண்டு, பேர்உண்டு, மணிஉண்டு, பணிஉண்டு,
உடைஉண்டு, கொடையும் உண்டு,
உன்டுண்டு மகிழவே உணவுண்டு, சாந்தம்உறும்
உளம் உண்டு, வளமும் உண்டு,
தேர்உண்டு, கரிஉண்டு, பரிஉண்டு, மற்றுள்ள
செல்வங்கள் யாவும் உண்டு,
தேன்உண்டு வண்டுறு கடம்பணியும் நின்பதத்
தியானம் உண்டாயில் அரசே
தார்உண்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம் ஓங்கு கந்தவேளே
தண்முகக் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே

- 'அருட்பிரகாச வள்ளலார்'
இராமலிங்க அடிகள்
(கந்தகோட்டம் தெய்வமணிமாலை)

அருள்மிகு

# ஸ்ரீ பாதாள பொன்னியம்மன்

## (புரசைவாக்கம்) ஆலய ஸ்தல வரலாறும், ஆனந்த வாழ்வளிக்கும் வழிகள் மற்றும் பாராயணப் பாடல்களும்


தொகுத்து வழங்கியவர்கள் :

சிவத்திரு. **A.** ராஜேந்திரன் **B.A.,**
தரக்கட்டுப்பாடு பிரிவு
அசோக் லேலண்ட்
எண்ணூர், சென்னை - 600 057.

திரு. தா.மு. ரவிச்சந்திரன்
எலெக்ட்ரிகல் பிரிவு
அசோக் லேலண்ட்
எண்ணூர், சென்னை - 600 057.



நாள் 26-01-1999
வெளியீடு : ஆன்மீக வழிபாட்டுக்குழு
அசோக் லேலண்ட், எண்ணூர்,
சென்னை - 600 057.

## ஆன்மீக வழிபாட்டுக் குழுவின்
## வண்ண மலர் மாலை




இந்த புத்தகம் வெளியாகுவதற்கு பெரிதும் உதவிய அனைவருக்கும் ஆன்மீக வழிபாட்டுக் குழுவின் நெஞ்சார்ந்த

நன்றி

# ஆன்மீக வழிபாட்டுக் குழு

## அசோக் லேலண்ட்
## எண்ணூர், சென்னை - 57

## தோற்றமும், வளர்ச்சியும்

நாம் வாழும் இப்பூவுலகம் அமைதியானதாகவும், வளம் மிக்கதாகவும் இருந்திடல் வேண்டும். நம் தாய் நாடாம் புண்ணிய பூமி இந்தியத் திருநாடு அனைத்துத் துறையிலும் சிறந்தோங்க வேண்டும். நம் தமிழகம் இந்திய நாட்டின் மாநிலங்களில் மிகச்சிறந்த மாநிலமாகத் திகழ வேண்டும். நாம் பணிபுரியும் அசோக் லேலண்ட் நிறுவனம் மேலும் வளர்ச்சி பெற்று அனைவரும் நல்வாழ்வு வாழ வேண்டும் என்ற உயர்ந்த லட்சியங்களை அடைந்திட நமக்கு எல்லாம் வல்ல இறைவன் அருள் செய்ய வேண்டும் என வழிபடுவதற்காகத் தோன்றியது தான் அசோக் லேலண்ட் ஆன்மீக வழிபாட்டுக் குழு.

'வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர் இனத்தகத்தான்' என்கிறார் அப்பரடிகள். தனியாகச் செய்யும் இறைவன் வழிபாடு சிறந்ததே. கூட்டாகச் சேர்ந்து செய்யும் குழுவழிபாடு அதனினும் சிறந்தது. ஒரு தனி நூலினால் ஒரு திருத்தேரினை இழுக்க இயலாது. ஆனால் பல நூல்கள் சேர்ந்து பெரிய வடமாக மாறும்போது அதனைக் கொண்டு பலப்பல பக்தர்கள் கூடி திருத்தேரினை இழுக்க இயலும். ஒரு தனிநபர் கையொப்பமிட்ட மனுவிற்குக் கிடைக்கும் கவனத்தைவிட பலர் கூட்டாகச் சேர்ந்து கையெழுத்திட்டு அனுப்பும் மனுவிற்கு அதிக கவனம் செலுத்தப்படுகிறது. எனவே எங்கும் பரந்து விரிந்துள்ள இறைவனுடைய கருணைப் பிரவாகத்தை நம்மிடம் எளிதில் ஈர்க்க உதவுவது கூட்டு வழிபாடாகும்.

இத்தகைய உயர்ந்த கூட்டு வழிபாட்டின் தத்துவத்தை உணர்ந்து, நம்முடன் பணிபுரிந்து தற்போது ஓய்வு பெற்றுள்ள திரு. ஆர். கண்ணன் மற்றும் திரு.வி. கோவிந்தராஜன் ஆகியோர் முதன்முதலில் 1985 ஆம் ஆண்டு 50பேர் கொண்ட ஆன்மீக வழிபாட்டுக் குழுவினைத் துவக்கினார்கள். அந்த ஆண்டு, இந்தியத் திருநாட்டின் குடியரசு தினமாகிய ஜனவரி 26ஆம் நாள் சென்னை அருள்மிகு காளிகாம்பாள் திருக்கோயிலில் அபிஷேக, ஆராதனை மற்றும் கூட்டுவழிபாட்டுடன்

துவக்கப்பட்ட இந்த ஆன்மீக வழிபாட்டுக் குழு தற்போது மேலும் வளர்ச்சியடைந்துள்ளது. மேற்குறிப்பிட்ட ஆன்மீக அன்பர்களுடன் இணைந்து நம்முடன் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ள திரு.இ.ஆர். மீனாட்சி சுந்தரம் மற்றும் திரு. P.கந்தசாமி ஆகியோரும் இக்குழுவின் வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றி வருகின்றனர். இவர்களைத் தொடர்ந்து, நம்முடன் பணியாற்றி வரும் ஆன்மீக அன்பர் திரு. எஸ் இராமச்சந்திரன் (இயந்திரப் பகுதி-3) அவர்கள் ஆலோசனையுடன், திரு. ஆர். சிவக்குமார் (என்ஜின் அசெம்பிளி), திரு. என். முருகேசன் (பி.பி.சி. இயந்திப் பகுதி -1), திரு. பாலகிருஷ்ணன், திரு.வி. இரவிச்சந்திரன் (ப்ராடக்ட் டெவலப்மெண்ட்) திரு. A. பாபு (பி.டி.ஐ). மற்றும் திரு. த.மு.இரவிச்சந்திரன் (எலக்டிரிக்கல்) ஆகிய ஆன்மீக அன்பர்களும் ஆற்றி வரும் பணியினால் தற்போது ஆன்மீக வழிபாட்டுக் குழு 1000 அன்பர்களுக்கும் சற்றுக் கூடுதலான உறுப்பினர்களைக் கொண்டு இறைவனருளால் வளர்ந்து வருகிறது. அசோக் லேலண்ட் ஆன்மீக வழிபாட்டுக் குழுவினர் 1985-ஆம் ஆண்டு துவங்கி இந்த ஆண்டு (1999) வரை ஒவ்வொரு ஆண்டும் ஜனவரி 26ஆம் தேதி, பதினைந்து ஆண்டுகளாக அபிஷேக, ஆராதனை மற்றும் வழிபாடு செய்த திருக்கோயில்கள் விவரம் வருமாறு :-

1. 1985 அருள்மிகு காளிகாம்பாள் திருக்கோயில்
மண்ணடி, சென்னை - 1.
2. 1986 அருள்மிகு வடபழனி ஆண்டவர்
திருக்கோயில், வடபழனி, சென்னை -26.
3. 1987 அருள்மிகு கற்பகாம்பாள் உடனுறை, கபாலீசுவரர்,
திருக்கோயில் திருமயிலை, சென்னை -4.
4. 1988 அருள்மிகு பார்த்தசாரதிசுவாமி
திருக்கோயில், திருவல்லிக்கேணி, சென்னை -5.
5. 1989 ஸ்ரீ கந்தசுவாமி கோயிலென வழங்கும்
ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி தேவஸ்தானம்,
பார்க்டவுன், சென்னை - 3. (வழிபாட்டுத் தேதி 6-2-89)
6. 1990 அருள்மிகு மருந்தீசுவரர் திருக்கோயில்,
தி ருவான்மியூர், சென்னை - 41.

7. 1991 அருள்மிகு தியாகராஜசுவாமி திருக்கோயில்,
திருவொற்றியூர், சென்னை - 19.

8. 1992 அருள்மிகு அஷ்டலட்சுமி திருக்கோயில்,
பெசன்ட்நகர், சென்னை -90.

9. 1993 அருள்மிகு மாசிலாமணீசுவரர் திருக்கோயில்,
வடதிருமுல்லைவாயில், சென்னை - 62.

10. 1994 அருள்மிகு திருவுடைஅம்மன் திருக்கோயில், மேலூர்.

11. 1995 ஸ்ரீ காமாட்சி அம்மன் மற்றும் ஸ்ரீ வைகுண்டப்
பெருமாள் தேவஸ்தானம், மாங்காடு,
சென்னை 602 101. (வழிபாட்டுத் தேதி 6.2.95)

12. 1996 அருள்மிகு ஸ்ரீ கோலத்தம்மன்,
ஸ்ரீ வேம்புலியம்மன் திருக்கோயில்
சேத்துப்பட்டு, சென்னை - 30.

13. 1997 அருள்மிகு வேங்கீஸ்வரர் திருக்கோயில்,
வடபழனி, சென்னை - 600 026.

14. 1998 அருள்மிகு வேதபுரீஸ்வரர் திருக்கோயில்,
திருவேற்காடு, சென்னை - 77.

15. 1999 அருள்மிகு பாதாள பொன்னியம்மன் திருக்கோயில்,
(புரசைவாக்கம்), கீழ்ப்பாக்கம், சென்னை-10.

இவ்வாறு ஆண்டுதோறும் ஆன்மீக வழிபாட்டுக் குழுவினர் செய்துவரும் கூட்டு வழிபாடு மிகவும் பாராட்டத் தக்கது. இந்த வழிபாடு மேலும் சிறப்புடன் தொடரவும், வளர்ச்சியடையவும் ஆன்மீக வழிபாட்டுக் குழுவினர்க்கு அருள் புரியுமாறு எனது கிராம தெய்வமான ஸ்ரீ பொற்காளியம்மனிடம். வேண்டிக்கொள்கிறேன்.

அன்பன்

சிவத்திரு **A.** இராஜேந்திரன் B.A.,
தரக்கட்டுப்பாடு பகுதி
அசோக் லேலண்ட்,
எண்ணூர், சென்னை-57.

# 2. அருள்மிகு ஸ்ரீ பாதாள பொன்னியம்மன் திருக்கோயில் ஸ்தல வரலாறு

தருமமிகு சென்னையில், நீதியை நிலைநாட்ட அமைந்துள்ள சென்னை உயர்நீதி மன்றத்திலிருந்து சுமார் மூன்று கிலோமீட்டர் தொலைவில் உள்ளது, சான்றோர் பலர் வாழும் புரசைவாக்கம். இவ்வூரில் உள்ள, நால்வரால் பாடப்பெற்ற 32 சிவத்தலங்களில் ஒன்றுதான் அருள்மிகு கங்காதீஸ்வரர் ஆலயம். இந்த ஆலயத்தின் அருகில் அமைந்தள்ளதுதான், அருள்மிகு ஸ்ரீ பாதாள பொன்னியம்மன் திருக்கோயில்.

இன்றைக்கு சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னால் சிறிய கோயிலாக இருந்தது இத்திருக்கோயில். ஆனால் இத்திருக்கோயிலின் கீர்த்தியோ மிகப் பெரியது.

அந்தக் காலத்தில் வயலும், வரப்பும் மற்றும் நீர் நிலைகளாகவும் இருந்த புரசைவாக்கத்தில் இத்திருக்கோயில் இருக்குமிடம் ஒரு தோட்டமாகத்தான் இருந்தது. ஒருமுறை தோட்டக்காரர்கள் கிணறு தோண்டும்போது கற்பாறை ஒன்று தட்டுப்பட்டது. அவர்கள் சிரமப்பட்டு அந்த கற்பாறையை அகற்றி மேலே கொண்டு வந்து பிறகு பள்ளத்தில் பார்க்கும்போது ஒரு அம்மன் கற்சிலையைக் கண்டனர். அந்தச் சிலையை மேலே கொண்டு வந்தனர். பிறகு மேலும் தோண்டிய போது ஐம்பொன்னால் ஆன மற்றொரு அம்மன் சிலையைக் கண்டெடுத்தனர். ஒரே இடத்திலிருந்து இரு சிலைகளைக் கண்டெடுத்ததால் ஊர்ப் பெரியவர்கள் அங்கு ஒரு திருக்கோயில் இருந்திருக்கக்கூடும் எனவும் முன்னோர்கள் அங்கு வழிபாடு செய்த அந்த தெய்வச்சிலைகள் தான் இவை எனவும், அன்னியர்கள் ஆதிக்கம் அல்லது இயற்கையின் உற்பாதங்களால் மறைக்கப்பட்டிருக்கலாம் எனவும் நம்பினர். கிணறு வெட்டுவதற்காக எடுக்கப்பட்ட, பள்ளத்திலிருந்துகிடைத்ததால் அம்மனுக்கு, 'பாதாள பொன்னியம்மன்' என்று பெயர் சூட்டி, சிறிய கோயிலமைத்து பக்தியுடன் வழிபடத் தொடங்கினார்கள்.

அருள்மிகு பாதாள பொன்னி அம்மனைப் பற்றி கோயில் பூசாரிகள் கூறும் தகவல் இது. வசுதேவரின் மனைவி தேவகிக்குப் பிறக்கும் எட்டாவது குழந்தை தன்னைக் கொன்றுவிடும் என அசரீரி கூறியதைக் கேட்டு பயந்த கம்சன், வசுதேவரையும், தேவகியையும் சிறையிட்டான். சிறையில் தேவகிக்குப் பிறந்த ஆறு குழந்தைகளையும்

கொன்றான். தேவகிக்கு ஏழாவதாக உருவாகிய கருவை ஸ்ரீமஹாவிஷ்ணுவின் ஆணைப்படி அவர் தங்கை யோக மாயை கோகுலத்தில் மறைந்து வாழந்த வசுதேவரின் மனைவி ரோஹிணியின் வயிற்றிற்கு மாற்றினார். தேவகியின் ஏழாவது கர்ப்பம் கலைந்து விட்டதாகக் கருதிய மக்கள் கம்சனை வெறுத்தனர். எட்டாவது குழந்தையாக தேவகியின் வயிற்றில் ஸ்ரீ மஹாவிஷ்ணுவே உருவெடுத்தார். அதே நேரம் கோகுலத்தில் நந்தகோபனின் மனைவி யசோதைக்குப் பெண் குழந்தையாக யோகமாதாவே பிறந்தார். பகவானின் ஆணைப்படி வசுதேவர் தேவகியின் எட்டாவது குழந்தை கண்ணனை, நாட்டு மக்கள் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் லீலையால் கட்டுண்டு கிடக்க, கோகுலத்திற்குக் கொண்டு சென்று யசோதையருகில் விட்டு அங்கிருந்து பெண்குழந்தையைக் கொண்டுவந்து தேவகியின் அருகில் படுக்க வைத்தார். அந்தப் பெண் குழந்தையையும் கொல்ல வந்தான் கம்சன். அவன் கையிலிருந்து வானில் சென்று அக்குழந்தை ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் தங்கை யோகமாயாவாக, எட்டுக் கைகளுடன் காட்சியளித்து கம்சனைக் கொல்லப் பிறந்த பிள்ளை வேறு இடத்தில் வளர்வதைக் கூறி மறைந்தது. இப்படி அவதரித்த யோகமாயாவை மக்கள் பத்ரகாளி, விஜயா, சண்டிகை, வைஷ்ணவி, என போற்றி வந்தனர். அந்த வடிவங்களில் ஒன்று தான் இந்த பொன்னியம்மன். இப்படி அவதரித்த அம்மனுக்கு முன் பிற்நத ஏழு அண்ணன்மார்களுக்கும் ஒரு தனி சன்னதி இத்திருக்கோயிலில் உள்ளது. அண்ணன்மார் சன்னதி என்ற இந்த விசேஷ அமைப்பு எங்கும் காணாத ஒன்று. பொன்னி அம்மனைக் கண்டெடுத்த கிணறு இன்றும் இத்திருக்கோயிலில் உள்ளது. புரசைவாக்கம் பகுதிக்கு எல்லைக் காவல் தெய்வமாக இருப்பவர் பாதாள பொன்னி அம்மன். சுற்றியுள்ள ஊர்களில் திருவிழா நடத்துபவர்கள், இந்த ஆலயம் வந்து கிணற்று நீர் எடுத்து, பொன்னிஅம்மனை வேண்டி தலைகுளித்து காப்புக்கட்டி, கரகம் எடுத்துச் செல்வர்.

அருள்மிகு ஸ்ரீ பாதாள பொன்னியம்மனுக்கு நடைபெறும் உற்சவங்களும், பூஜைகளும், விசேஷமானவை. பழங்காலத்தில் பொன்னி அம்மனை பிரம்மோற்சவத்தின் போது மற்ற ஊர்களுக்கும் பூஜைக்காக எடுத்துச் சென்றால் கோயிலுக்குத் திரும்ப ஆறு மாதம் ஆகுமாம். காலமாற்றத்தினால் இப்போது பாதாள பொன்னியம்மன பிரம்மோற்சவம் கோயிலிலேயே சிறப்பாக நடைபெறுகிறது. இதேபோல்

நவராத்திரி விழா பத்து நாட்கள் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. அந் சமயத்தில் பொன்னி அம்மனுக்கு பலவித அலங்காரங்கள் செ வழிபடுவது வழக்கம். பத்து நாட்களும் மிகச் சிறந்த கலை, இலக்கி இசை விழாக்கள் திருக்கோயிலில் நடைபெறுகின்றன. வருடத்தி ஒருமுறை லட்சார்ச்சனையும் சிறப்பாக நடைபெறுகிறது.

மிகவும் சக்தியும், மகிமையும் பொருந்திய அருள்மிகு பாத பொன்னியம்மன் பக்தர்களின் நோயினைத் தீர்த்து வைக்கும் கண்கன தெய்வம். இதற்கு உதாரணமாக 1998 ஆம் ஆண்டு நடந்த ஒரு அதி சமபவத்தைத் தெரிவித்தார், இக்கோயிலில் பக்த ஜனசபையின நடத்தும் திரு. பாண்டுரங்கம் அவர்கள். வேலூரிலிருந்து ஒரு அன் உயர்நீதிமன்ற வழக்கு விஷயமாக தன் துணைவியாருடன் சென்ன வந்திருக்கிறார். அவர்கள் வந்த பேருந்து சென்னை நகருள் வரும்போ அந்த அன்பருக்கு கடும் வயிற்று வலி ஏற்பட்டு அந்த இடத்திலிரு ஒரு தனியார் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டார். ப பரிசோதனைகள் செய்தும் காரணம் கண்டுபிடிக்கப்படவில்ல வலிகுறைய ஊசிகள் போடப்பட்டது. மருத்துவர்களும் 24 மணி நே கடந்தபின்தான் எதையும் கூற முடியும் என்றனர். இதனைக் கண்ணு மருத்துவமனைக்கு வந்திருந்த ஒருவர் அருகாமையிலுள்ள அருள்ம ஸ்ரீ பாதாள பொன்னியம்மன் ஆலயம் சென்று வழிபடுமாறு கூறின மருத்துவர் அனுமதியுடன் அந்த அன்பரும் அவரது துணைவியா திருக்கோயில் சென்றனர். உளமுருக, கண்ணீர்மல்க பாத பொன்னியம்மனை வேண்டினர். அவர்களை அழைத்து அம்மனு தீபாராதனை காண்பித்த கோயில் பூசாரி அம்மனின் அபிலே தீர்த்தத்தைக் கொடுத்து அந்த அன்பரைப் பருகச் செய்தார். அன்ப துணைவியாரும் மனதார பொன்னியம்மனை வேண்டினர். என்ன ஒ மகத்துவம்? அவர்கள் வணங்கியதும் அன்பரின் வயிற்றுவலி மறைந் அன்பர் முழு குணமடைந்தார். மருத்துவர்களும் ஆச்சரியமடை இந்த நிகழ்ச்சியைச் சிலிர்ப்புடன் நினைவு கூர்ந்தார் உயர்தி பாண்டுரங்கம் அவர்கள். இந்தத் திருக்கோவிலில் எம்மதத்தின வந்து வழிபடுவது மேலும் சிறப்பாகும்.

இப்படி வணங்கி வழிபடும் அன்பருக்கெல்லாம் ஸ்ரீ பாத பொன்னியம்மன் அருள் செய்வது போலவே என்னையும் பா புனைய வைத்து அருள்புரிந்ததை என்னவென்று விவரிப்பது ! ந ம

ஆன்மீக வழிபாட்டுக் குழுவினர் நடத்தும் இந்த ஆண்டு பூஜையில் பாடுவதற்கு அருள்மிகு பாதாள பொன்னியம்மன் மீது ஒரு பாடல் எழுத விரும்பினேன். ஆனால் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தேன். இப்படி சிலநாட்கள் ஆனது. ஒரு நாள் இரவு படுக்கச் சென்றதும், சுமார் இரவு 11.30 மணி இருக்கும்போது யாரோ என்னைத் தட்டி எழுப்புவது போலிருந்தது. உடனே விழித்துக் கொண்டேன். அறையில் நல்ல மணம் வீசவே, அருள்மிகு பாதாள பொன்னியம்மன் நினைவு வர, அப்போதே எழுதிய பாடல்தான் இப்புத்தகத்தில் கொடுக்கப்பட்டுள்ள 'ஸ்ரீ பாதாள பொன்னியம்மன்' என்ற தலைப்பின் கீழுள்ள 'பொன்னியம்மா, பொன்னியம்மா' என்ற பாடல். பத்து நிமிடங்களில், 32 வரிகளில் இப்பாடலை எழுதவைத்த பொன்னிஅம்மனின் மகிமையை என்னவென்று சொல்வது. இப்பாடலை 26-01-99 அன்று கோயிலில் ஆன்மீக வழிபாட்டுக் குழுவினர் பக்தியுடன் பாடிப் பரவசம் அடைந்தனர். பக்தர்கள் அனைவரும் தினமும் இப்பாடலை பூஜையில் பாடி, அருள்மிகு பாதாள பொன்னியம்மன் அருளைப் பெற அம்மனை வேண்டிக் கொள்கிறேன்.

## ஸ்ரீ பாதாள பொன்னியம்மன்

1. பொன்னியம்மா பொன்னியம்மா
பாதாள பொன்னியம்மா
புரசைவாக்கம் நகரினையே
ஆட்சி செய்யும் பொன்னியம்மா (பொன்னியம்மா)

2. கோகுலத்தில் அவதரித்து
கோபால கண்ணனுக்கு
அசுரர் குலம் அழித்திடவே
உதவவந்த பொன்னியம்மா (பொன்னியம்மா)

3. அண்ணன்மார்கள் ஏழ்வருடன்
ஆளுகின்ற பொன்னியம்மா
அசோக்லேலண்ட் அன்பர்களை
ஆதரிக்கும் பொன்னியம்மா (பொன்னியம்மா)

4. பாசமுள்ள என்தாயே
பக்தர்களைக் காப்பவளாம்
பாதம் பணிவோரை
பரிவோடு அணைப்பவளாம் (பொன்னியம்மா)

5. திக்கெட்டும் உன்பெயராம்
தீண்டாமை ஒழிப்பவளாம்
தீராத நோய்களையும்
தீர்த்துவைக்கும் பொன்னியம்மா (பொன்னியம்மா)

6. ஓம்சக்தி என்பவளாம்
ஓங்கார காளியாம்
ஓடோடி வருவோரை
ஓங்கவே செய்திடுவாள் (பொன்னியம்மா)

7. கண்கண்ட தெய்வமவள்
கவலைகளைப் போக்கிடுவாள்
பாரினைக் காக்கின்ற
பாதாள காளியம்மா (பொன்னியம்மா)

8. என்னையும் பாடவைத்தாய்
என்தாயே பொன்னியம்மா
எண்ணூரில் பணிபுரியும்
எங்களையும் வாழ வைப்பாய் (பொன்னியம்மா)

மேற்கண்ட பாடலை தினமும் ஒருமுறை நாம் பாடிவந்தால் பாதாளபொன்னியம்மனின் அனுக்கிரகம் பரிபூரணமாக நமக்குக்கிட்டி எல்லா செல்வங்களும் பெறலாம் எனக்கூறி இப்பாடலை இயற்ற எனக்கு ஞானமும், அனுக்கிரகமும் கொடுத்த என்தெய்வமான ஸ்ரீபொற்காளியம்மன் பாதங்களில் சமர்ப்பிக்கிறேன்.

அருள்மிகு ஸ்ரீ பாதாள பொன்னியம்மனின் மகத்துவத்தையும், ஆலய ஸ்தல வரலாற்றையும் எழுதி வழங்க ஞானமும், அனுக்கிரகமும் தந்தருளிய என் தெய்வமான அருள்மிகு ஸ்ரீ பொற்காளியம்மன் பாதங்களை வணங்கி வழிபடுகிறேன்.

அன்புடன்

சிவத்திரு A. இராஜேந்திரன் B.A.,
அறங்காவலர் அருள்மிகு ஸ்ரீ சிந்தாமணீஸ்வரர் ஆலயம்,
42/2வது தெரு, காட்டுக் குப்பம், எண்ணூர், (திருவள்ளூர் மாவட்டம்)
சென்னை - 57.

# 3. திருவிளக்கு வழிபாடு

(தொகுப்பு சிவத்திரு A. ராஜேந்திரன்)

ஒளியை வழிபடும் வழக்கம் பல நூற்றாண்டுகளாக நம் முன்னோர்களிடம் இருந்து வந்துள்ளது. ஒளியின்றி உயிரேது? ஒளியின்றி பயிரேது? ஒளியின்றி இருள் எவ்வாறு விலகும்? அகஇருளையும், புற இருளையும் நீக்கும் ஒளியினை வழிபடுவது இந்து சமயத்தில் உயர்ந்த வழிபாடாக விளங்கி வருகிறது. எனவேதான்நம்முன்னோர்கள் உலகிற்கு ஒளிதரும் ஆதவனையும், இல்லத்திற்கு ஒளி தரும் திருவிளக்கினையும் வழிபட்டார்கள். இல்லங்களில் காலையிலும், மாலையிலும் திருவிளக்கேற்றி வழிபடுவது நம் வழக்கம். அவ்வாறே ஆலயங்களிலும் மகளிர் ஒன்றாகக் கூடி குத்துவிளக்கேற்றி பூஜை செய்வதும் மிக உயர்ந்த வழிபாடாக தொன்றுதொட்டு இருந்து வருகிறது. இத்தகைய மேன்மை பொருந்திய திருவிளக்கு பூஜைக்கான நியதிகளை அனைவரும் அறிந்து கொள்வதற்காக வழங்கியுள்ளோம்.

## திருவிளக்கு பூஜை

தலைவாழை இலை மீது குத்துவிளக்கினை வைத்து பூஜையை ஆரம்பிக்க வேண்டும்.

திருவிளக்கின் உச்சியில் ஒரு பொட்டும் (நெற்றி), இதன் கீழ் மூன்று பொட்டுகளும் (சூரியன், சந்திரன், அக்கினி) இதற்குக் கீழே இரண்டு பொட்டுகளும் (திருக்கரங்கள்), கீழ்ப்பகுதியில் இரண்டு பொட்டுகளும் (திருவடிகள்) இட வேண்டும்.

எவர்சில்வர் விளக்கு பூஜைக்கு உகந்ததல்ல.

பூஜைக்குத் தேவையான பொருட்கள் :

மஞ்சள் பொடி, மஞ்சள், குங்குமம், முழுஅரிசி (கைப்பிடி அளவு) பழம், வெற்றிலை, பாக்கு, சந்தனம், ஊதவத்தி(2), கற்பூரம், பூச்சரம், (சுமார் இரண்டு முழம்), உதிரி மலர்கள், பூசை மணி,பஞ்சபாத்திரம், தண்ணீர், தாம்பூலத் தட்டு, எண்ணெய், திரி, தீப்பெட்டி, உட்காருவதற்கு மணை அல்லது துணி, அருகம்புல், நிவேதனத்திற்கு பொங்கல், வாழைஇலை.

பூஜை நேரம் மாலை 5.30 மணி *(கன்னிப் பெண்களுக்கு நன்மை :)*

திருவிளக்கு பூஜை செய்வதற்கு முன் தரையில் கோலமிட்டு அதன்மேல் நெல்லைப்பரப்பி அதன்மீது அலங்கரித்த குத்து விளக்கை வைத்து கன்னிப்பெண்கள் பூஜை செய்தால் நல்ல கணவர் அமைவார்.

## திருவிளக்கு ஏற்றுவதற்கு உகந்த எண்ணெய்களும் அதன் பலன்களும் :

| | |
|---|---|
| நல்லெண்ணெய் : | சகல துன்பமும் விலகும் |
| ஆமணக்கெண்ணெய் : | பந்துக்கள் சுகம், தாமபத்ய சுகம் |

பூஜைக்கு கடலை எண்ணெய் உகந்ததல்ல.

**தெய்வங்களுக்கு உகந்த எண்ணெய்கள் :**

| | |
|---|---|
| குலதெய்வம் | பசுநெய், வேப்பெண்ணெய் மற்றும் இலுப்பெண்ணெய் மூன்றும் கலந்து |
| கணபதி : | தேங்காய் எண்ணெய் |
| மகாலட்சுமி : | பசுநெய் |
| நாராயணர் : | நல்லெண்ணெய் |
| ருத்திரர் : | இலுப்பெண்ணெய் |
| பராசக்தி : | பசுநெய், விளக்கெண்ணெய், வேப்பெண்ணெய், தேங்காய் எண்ணெய் மற்றும் இலுப்பெண்ணெய் ஆகிய ஐந்தும் கலந்து |
| ஐயப்பன் : | நெய் |
| சர்வதேவதைகள்: | நல்லெண்ணெய் |

**திருவிளக்கேற்றும் திரிகளும் அதன் பலன்களும் :**

| | |
|---|---|
| வாழைத்தண்டு நூல்: | குழந்தை பாக்கியம், தெய்வ குற்றம் நீங்குதல், சாபம் நீங்குதல் |
| பருத்தி பஞ்சு நூல்: | நல்லவை அனைத்தும் நல்கும் |
| தாமரைத் தண்டு நூல் : | முன் வினை பயம் நீங்கல், செல்வம் நிலைக்கும் |
| புது சிவப்பு வண்ண சேலைத் துண்டு நூல்: | திருமணத் தடை நீங்கும், குழந்தை பாக்கியம், செய்வினை நீங்குதல் |
| புது மஞ்சள் வண்ண சேலைத் துண்டு நூல்: | சகல வியாதிகளும் நீங்கும், காற்று சேஷ்டை நீங்கும், அம்மன் அருள் கிட்டும். |

வெள்ளெருக்கு இலைபட்டை திரி : நிறை செல்வம் கிட்டும்
பன்னீர் விட்டு காய
வைத்த வெள்ளைத்
துணியில் திரிக்கப்பட்ட திரி : உத்தம பலன் அனைத்தும் கிட்டும்.

**திருவிளக்கேற்றும் திசைகளும் பலன்களும் :**

| | |
|---|---|
| கிழக்குத் திசை : | துன்பம் நீங்கி, கிரகக் கோளாறு குறையும் |
| மேற்குத் திசை : | கடன் தீரும், சனி மற்றும் கிரக தோஷம் விலகும், பங்காளிப்பகை விலகும். |
| வடக்குத் திசை : | திரவிய செல்வம் கிட்டும் மங்கலம் சேரும். |
| தெற்குத் திசை : | இத்திசையில் தீபம் ஏற்றக் கூடாது |

**திருவிளக்கின் முகங்களும், பலன்களும் :**

| | | |
|---|---|---|
| ஒரு முக தீபம் | : | மத்திய பலன் |
| இரு முக தீபம் | : | குடும்ப ஒற்றுமை பெருகும் |
| மும்முக தீபம் | : | புத்திரசுகம் ஏற்படும் |
| நான்முக தீபம் | : | பசு, பூமிச் செல்வம் சேரும் |
| ஐம்முக தீபம் | : | அனைத்து நலமும் கிட்டும் |

## பூஜை :-

குருவணக்கம் சொல்ல வேண்டும் :

குருர் ப்ரும்ஹா குருர்விஷ்ணு
குருர் தேவோ மஹேச்வர
குரு சாஷாத் பரம் ப்ரஹ்ம
தஸ்மை ஸ்ரீ குருவே நம

குரு வணக்கம் சொல்லியபின், பின்வரும் கணபதி சுலோகம் சொல்லியபடி தலையில் குட்டிக் கொள்ளவும்.

கணபதி வணக்கம் :

ஓம் சுக்லாம் பரதம் விஷ்ணும்
சசி வர்ணம் சதுர்புஜம்
ப்ரசன்ன வதனம் த்யாயேத
சர்வ விக்நோப சாந்தயே

சங்கற்பம் :

வலது தொடையின் மீது, இடது கையைக் கீழும் வலது கையை அதன் மீதும் உள்ளங்கைகள் தொட்டுக் கொள்ளுமாறு வைத்து மூடிக் கொள்ளவும்.

அஸ்மின் க்ராமே, வஸதாம், ஸர்வேசாம்
மஹா ஜனானாம், க்ஷேமம்,
தைர்ய, வீர்ய, விஜய, ஆயுள்,
ஆரோக்ய ஐஸ்வர்யாணாம்
அபிவிருத்தியர்த்தம், இஷ்ட காம்யார்த்த
சித்தியர்த்தம், ஸ்ரீ சித்தி விநாயக
பிரசாத சித்தியர்த்தம், பாத்ரபத,
சுக்ல சதுர்த்தி, புண்யகாலே
சித்தி விநாயக பூஜாம் கரிஷ்யே.

கலச பூஜை : பஞ்ச பாத்திரத்தில் நாற்புறமும் மஞ்சள், சந்தனம், குங்குமம் இட்டு, தண்ணீர் நிரப்பி, அதில் ஒரு மலர் அட்சதைப் போட்டு பின்வரும் கலச மந்திரத்தைச் சொல்லவும்.

தங்கம் கலச பூஜாம் கரிஷ்யே நமஹா
கலசம் கந்தம் சமர்ப்பயாமி
அட்சதாம் சமர்ப்பயாமி

கணபதி கலச பூஜை :

கங்கை யமுனே சைவ
கோதாவரி சரஸ்வதி
நர்மதே சிந்து காவேரி
தீர்த்தே அஸ்மின் சந்நிதம் குரு

என்று கூறி, சிறிது பூ மற்றும் மஞ்சள் கலந்த அரிசியும் எடுத்து பஞ்சபாத்திர கலசத்தின் மேல் போட்டு, கற்பூர தீபம் ஏற்றி வணங்க வேண்டும்.

அதன் பிறகு, கையில் மஞ்சள் கலந்த அரிசி அல்லது சிறிது உதிரிப்பூ எடுத்துக் கொண்டு பின்வரும் கணபதி மந்திரம் சொல்லியபின், பஞ்சபாத்திர கலசத்தின் மீத போட வேண்டும்.

கணபதி சுலோகம் :

ஓம் சுமுகாய நமஹா
ஓம் ஏகதந்தாய நமஹா
ஓம் கபிலாய நமஹா
ஓம் கஜகர்ணாய நமஹா
ஓம் லம்போதராய நமஹா
ஓம் விகடாய நமஹா
ஓம் விக்னராஜாய நமஹா
ஓம் விநாயகாய நமஹா
ஓம் தூம கேதுவே நமஹா
ஓம் காணாத்ய க்ஷாய நமஹா
ஓம் பாலசந்த்ராய நமஹா
ஓம் வக்ரதுண்டாய நமஹா
ஓம் வரதாய நமஹா
ஓம் நந்தாய நமஹா
ஓம் சூர்ப்பகர்ணாய நமஹா
ஓம் ஹேரம்பாய நமஹா
ஓம் ஸ்கந்த பூர்வஜாய நமஹா
ஓம் மஹா கணபதியே நமஹா

மந்திரம் :

நானாவித பத்ர புஷ்பாணியம் சமர்ப்பயாமி
தூபம் ஆக்கிராபியாமி தீபம் தர்ஸயாமி நமோ நமஹா
புண்டரீகா க்ஷாயாய நமஹா
புரோக்ஷிய பரிஷ்சாய யதாபாகம்
கலே நைவேத்தியம் சமர்ப்பயாமி
அஸ்தப்ர க்ஷாளனம் சமர்பபயாமி
பாத பூஜை சமர்ப்பயாமி
புனர் அசமனியம் சமர்ப்பயாமி
தாம்பூலம் சமர்ப்பயாமி
ஸ்வர்ண புஷ்பத பக்ஷணம்
கற்பூர நீராஞ்சனம் சமர்ப்பயாமி
ஓம் சாந்தி. ஓம் சாந்தி. ஓம் சாந்தி

சில குறிப்புகள் :

பொதுவாக திருவிளக்கில் எண்ணெய் இட்ட பிறகுதான் திரிபோடவேண்டும். திரி பொதுவாக கிழக்கு முகமாக வைத்து தீபம் ஏற்றுவது சிறப்பு.

திருவிளக்கு பூஜை நடைபெறும் போது, திரி கிழக்கு முகமாக ஏற்ற வேண்டும். அல்லது தன் முகத்திற்கு நேராக திரி போட்டு திருவிளக்கினை ஏற்ற வேண்டும்.

திருவிளக்கை ஏற்றும்போது 'ஒளிதரும் உமையே எழுந்தருள் தாயே' என்று சொல்லி தீபம் ஏற்ற வேண்டும். அப்படி ஏற்றும், அந்தத் திருவிளக்கில் திருமகள், ஸ்ரீ பார்வதி, ஸ்ரீதுர்க்கை ஆகிய தெய்வங்களில் ஒரு தெய்வத்தை நிறுத்துதல் வேண்டும்.

திருவிளக்கை ஏற்றியபின் 'திருவிளக்கு தாயே எழுக, நல்லருள் தருக', என்று சொல்லி மஞ்சள் கலந்த அரிசியை திருவிளக்கின் பாதத்திலிட வேண்டும். பிறகு 'திருவிளக்கே, குலவிளக்கே, மனத்திருள் நீக்கும் மங்கல விளக்கே, நல்வரவாய் நின்று நலம் தரும் தாயே, உன்வரவால் நாம் மகிழந்தோம்' என்று சொல்லி வரவேற்று திருவிளக்கின் பாதத்தில் மஞ்சள் கலந்த அரிசியை இடவேண்டும். இதன்பின் தண்ணீரை எடுத்துக் கொண்டு 'நின்பாதம் பூஜித்தோம், பொலிவுறு; பொலிவுறு; என்று சொல்லி திருவிளக்கின் பாதத்தில் தண்ணீரை விடவேண்டும். பிறகு பூக்களை எடுத்துக்கொண்டு 'வணங்கினோம் மகிழ்ச்சியின் வடிவே அலரிட்டு வணங்கினோம், அருகினில் வருவாய்' என்று சொல்லி திருவிளக்கின் பாதத்தில் இட வேண்டும்.

## திருவிளக்கு அர்ச்சனை :

திருவிளக்கு அர்ச்சனை முப்பத்தாறினையும் மூன்று முறை ஜெபித்து நூற்றி எட்டு அர்ச்சனை செய்ய வேண்டும். அர்ச்சனைக்கு குங்குமம் அல்லது மலர் கொண்டு திருவிளக்கின் பாதத்தில் இடவேண்டும்.

1. ஓம் சிவாய நம
   ஓம் சிவசக்தியே நம
   ஓம் இச்சாசக்தியே நம
   ஓம் கிரியா சக்தியே நம
   ஓம் சொர்ண சொரூபியே நம
6. ஓம் ஜோதிலட்சுமியே நம
   ஓம் தீபலட்சுமியே நம
   ஓம் மகாலட்சுமியே நம
   ஓம் தனலட்சுமியே நம
   ஓம் தான்யலட்சுமியே நம
   ஓம் தைர்யலட்சுமியே நம
12. ஓம் வீரலட்சுமியே நம
   ஓம் விஜயலட்சுமியே நம
   ஓம் வித்யாலட்சுமியே நம
   ஓம் ஜெயலட்சுமியே நம
   ஓம் வரலட்சுமியே நம

ஓம் கஜலட்சுமியே நம
18. ஓம் காமவல்லியே நம
ஓம் காமாட்சி சுந்தரியே நம
ஓம் இராஜலட்சுமியே நம
ஓம் சுபலட்சுமியே நம
ஓம் கிருஹலட்சுமியே நம
ஓம் சித்த லட்சுமியே நம
24. ஓம் சீதா லட்சுமியே நம
ஓம் திரிபுரலட்சுமியே நம
ஓம் சர்வமங்கள காரணியே நம
ஓம் சர்வ துக்க நிவாரணியே நம
ஓம் சர்வாங்க சுந்தரியே நம
ஓம் செளபாக்ய லட்சுமியே நம
30. ஓம் நவக்கிரஹ தாயினியே நம
ஓம் அண்டர்நாயகியே நம
ஓம் அலங்கார நாயகியே நம
ஓம் ஆனந்த சொரூபியே நம
ஓம் அகிலாண்ட நாயகியே நம
ஓம் பிரம்மாண்ட நாயகியே நம
36. ஓம் சிற்பரத்தாளே நம

## பெண்கள் சொல்லவேண்டிய திருவிளக்கு மந்திரம்

பூஜையின்போது பெண்கள் பின்வரும் மந்திரம் சொல்லி, திருவிளக்கின் பாதத்தில் மலரிட வேண்டும்.

ஓம் பூங்குழல் விளக்கே போற்றி போற்றி
ஓம் உலகம் உவப்புற வாழ்வருள் போற்றி
ஓம் உயிர்களின் பசிப்பிணி ஒழித்தருள் போற்றி
ஓம் செல்வம், கல்வி சிறப்பருள் போற்றி
ஓம் நல்லன்பு, ஒழுக்கம் நல்குவாய் போற்றி
ஓம் விளக்கிட்டார்க்கு மெய்ந்நெறி விளக்குவாய் போற்றி
ஓம் நலம்எலாம் உயிர்க்கு நல்குக போற்றி
ஓம் தாயே நின்னருள் தந்தாய் போற்றி
ஓம் தூயநின் திருவடி தொழுதனம் போற்றி
ஓம் போற்றி என்பார் அமரர்விளக்கே போற்றி
ஓம் போற்றி என்பார் அன்பொலி விளக்கே போற்றி
ஓம் போற்றியே போற்றி திருவிளக்கே போற்றி

## திருவிளக்கு போற்றி 108 (அஷ்டோத்திரம்)

இப்போது திருவிளக்கு போற்றி நூற்றிஎட்டையும் உளமுருகப்பாடி திருவிளக்கின் பாதத்தில் குங்குமம் அல்லது மலர் இட்டு வணங்க வேண்டும்.

1. ஓம் பொன்னும் மெய்ப்பொருளும் தருவாய் போற்றி
ஓம் போகமும் திருவும் புணர்ப்பாய் போற்றி
ஓம் முன்னறி ஒளியாய் மிளிர்ந்தாய் போற்றி
ஓம் மூவுலகமும் நிறைந்திருந்தாய் போற்றி
ஓம் வரம்பில் இன்பமாய் வளர்ந்திருந்தாய் போற்றி
ஓம் இயற்கையாய் அறிவொளி ஆனாய் போற்றி
ஓம் ஈர்ஏழ் உலகமும் ஈன்றாய் போற்றி
ஓம் பிறர் வயமாகாப் பெரியோய் போற்றி
ஓம் பேரின்பப் பெருக்காய் பொலிந்தாய் போற்றி
ஓம் பேரருள் கடலாம் பொருளே போற்றி
11. ஓம் முடிவில் ஆற்றல் உடையாய் போற்றி
ஓம் மூவுலகமும் தொழும் மூத்தாய் போற்றி
ஓம் அளவிலாச் செல்வம் தருவாய் போற்றி
ஓம் ஆனந்த அறிவொளி விளக்கே போற்றி
ஓம் எனும் பொருளாய் உள்ளோய் போற்றி
ஓம் இருள் கெடுத்து இன்பருள் ஈந்தாய் போற்றி
ஓம் மங்கள நாயகியே மாமணி போற்றி
ஓம் வளமை நல்கும் வல்லியே போற்றி
ஓம் அறம்வளர் நாயகி அம்மையே போற்றி
ஓம் மின்னொளி அம்மையாம் விளக்கே போற்றி
21 ஓம் மின்ஒளிப் பிழம்பாய் வளர்ந்தாய் போற்றி
ஓம் தையல் நாயகித்தாயே போற்றி
ஓம் தொண்டர் அகத்து அமர் தூமணி போற்றி
ஓம் முக்கட் சுடரின் முதல்வி போற்றி
ஓம் ஒளிக்குள் ஒளியாய் உயர்வாய் போற்றி
ஓம் சூளாமணியே சுடர் ஒளி போற்றி
ஓம் இருள் ஒழித்து இன்பம் ஈவோய் போற்றி
ஓம் அருள்பொழிந்து எம்மை ஆள்வோய் போற்றி

ஓம் அறிவினுக்கு அறிவாய் ஆனாய் போற்றி
ஓம் இல்லக விளக்காய் இறைவி போற்றி
31 ஓம் சுடரே விளக்காம் தூயோய் போற்றி
ஓம் இடரைக் களையும் இயல்பினாய் போற்றி
ஓம் எரிசுடராய் நின்ற இறைவி போற்றி
ஓம் ஞானச்சுடர் விளக்காய் நின்றாய் போற்றி
ஓம் அருமறைப் பொருளாம் ஆதி போற்றி
ஓம் தூண்டுசுடர் அனைய ஜோதி போற்றி
ஓம் ஜோதியே போற்றி சுடரே போற்றி
ஓம் ஓதும் உள்ஒளி விளக்கே போற்றி
ஓம் இருள் கெடுக்கும் இல்லக விளக்கே போற்றி
ஓம் சொல்லக விளக்காம் ஜோதி போற்றி
41 ஓம் பலர்காண் பல்லக விளக்கே போற்றி
ஓம் நல்லக நமசிவாய விளக்கே போற்றி
ஓம் உவப்பிலா ஒளிவளர் விளக்கே போற்றி
ஓம் உணர்வுசூழ் கடந்ததோர் விளக்கே போற்றி
ஓம் உடம்பெனும் மனையக விளக்கே போற்றி
ஓம் உள்ளத் தகழி விளக்கே போற்றி
ஓம் மடம்படு உயர்நெய் விளக்கே போற்றி
ஓம் உயிர் எனும் திரிமயக்கு விளக்கே போற்றி
ஓம் இடம்படும் ஞானத்தீ விளக்கே போற்றி
ஓம் நோக்குவார்க்கு எரிகொள் விளக்கே போற்றி
51 ஓம் ஆதியாய் நடுவுமாகும் விளக்கே போற்றி
ஓம் அளவிலா நடுவுமாகும் விளக்கே போற்றி
ஓம் ஜோதியாய் உணர்வுமாகும் விளக்கே போற்றி
ஓம் தில்லைப் பொது நடவிளக்கே போற்றி
ஓம் கற்பனை கடந்த ஜோதி போற்றி
ஓம் கருணையே உருவாம் விளக்கே போற்றி
ஓம் அற்புத கோல விளக்கே போற்றி
ஓம் அருமறைச் சிரத்து விளக்கே போற்றி
ஓம் சிற்பர வியோம விளக்கே போற்றி
ஓம் பொற்புடன்நடம்செய் விளக்கே போற்றி
61 ஓம் உள்ளத்து இருளை ஒழிப்பாய் போற்றி

ஓம் கள்ளப்புலனைக் கரைப்பாய் போற்றி
ஓம் உருகுவோர் உள்ளத்து ஒளியே போற்றி
ஓம் பெருகு அருள் சுரக்கும் பெருமா போற்றி
ஓம் இருள்சேர் இருவினை எறிவாய் போற்றி
ஓம் அருவே உருவே அருவுரு போற்றி
ஓம் நந்தா விளக்கே நாயகி போற்றி
ஓம் செந்தாமரைத் தாள் தந்தாய் போற்றி
ஓம் தீபமங்கள ஜோதி போற்றி
ஓம் மதிப்பவர் மாமணி விளக்கே போற்றி
71 ஓம் பாகம்பிரியா பாராபரை போற்றி
ஓம் ஆகம முடிமேல் அமர்ந்தாய் போற்றி
ஓம் ஏகமாய் நடம்செய் எம்மான் போற்றி
ஓம் ஊழி ஊழி உள்ளாய் போற்றி
ஓம் ஆழியான் காணா அடியோய் போற்றி
ஓம் ஆதியும் அந்தமும் ஆனாய் போற்றி
ஓம் அந்தமில் இன்பம் அருள்வோய் போற்றி
ஓம் முந்தை வினையை முடிப்போய் போற்றி
ஓம பொங்கும் கீர்த்தி பூரணி போற்றி
ஓம் தண்ணருள் சுரக்கும் தாயே போற்றி
81 ஓம் அருளே உருவாய் அமைந்தோய் போற்றி
ஓம் இருநில மக்கள் இறைவி போற்றி
ஓம் குருவெனஞானம் கொடுப்பாய் போற்றி
ஓம் ஆறுதல்எமக்கு இங்கு அளிப்பாய் போற்றி
ஓம் தீது எல்லாம் தீர்க்கும் திருவே போற்றி
ஓம் பக்தியில் ஆழந்த பரமே போற்றி
ஓம் எத்திக்கும் துதி ஏய்ந்தாய் போற்றி
ஓம் அஞ்சலென்றருளும் அன்பே போற்றி
ஓம் தஞ்சம் என்றவரைச் சார்வோய் போற்றி
ஓம் ஓதுவார் அகத்து உற்ற ஒளியே போற்றி
91 ஓம் ஓங்காரத்து உள்ளொளி விளக்கே போற்றி
ஓம் எல்லா உலகமும் ஆனாய் போற்றி
ஓம் பொல்லா வினைகள் அறுப்பாய் போற்றி
ஓம் புகழ்சேவடி என்மேல் வைத்தோய் போற்றி

ஓம் செல்வியே செல்வம் தருவாய் போற்றி
ஓம் பூங்கழல் விளக்கே புனிதையே போற்றி
ஓம் உலகம் உவப்புற வாழ்வருள் போற்றி
ஓம் உயிர்களின் பசிப்பிணி ஒழித்தருள் போற்றி
ஓம் செல்வம் கல்வி சிறப்பருள் போற்றி
ஓம் நல்அன்பு ஒழுக்கம் நல்குவாய் போற்றி
101ஓம் விளக்கிட்டார்க்கு மெய்ந்நெறிவிளக்குவாய் போற்றி
ஓம் நலம் எலாம் உயிர்க்கு நல்குக போற்றி
ஓம் தாயே நின்னருள் தருவாய் போற்றி
ஓம் தூயநின் திருவடி தொழுதனம் போற்றி
ஓம் போற்றி என்பார் அமரர் விளக்கே போற்றி
ஓம் போற்றி என்பார் மனிதர் விளக்கே போற்றி
ஓம் போற்றி என் அன்பொலி விளக்கே போற்றி
108ஓம் போற்றி போற்றி திருவிளக்கே போற்றி

## தீபம் காட்டுதல் :

திருவிளக்கு அர்ச்சனை, திருவிளக்கு மந்திரப் பாடல் மற்றம் திருவிளக்கு போற்றி 108 (அஷ்டோத்திரம்) ஆகிய மூன்றையும் ஜெபித்தபின் புஷ்பத்தை எடுத்து திருவிளக்கின் பாதத்தில் இட்டு, ஊதவத்தி காண்பித்து பின்பு கற்பூர தீபத்தை, பின்வரும் பாடலைப் பாடியபடி திருவிளக்கிற்குக் காண்பிக்க வேண்டும்.

திங்களில் ஜோதிநீ; தினகரன் ஜோதி நீ ;
அங்கியில் ஜோதிநீ; அனைத்திலும் ஜோதி நீ ;
எங்களுள் ஜோதி நீ; ஈஸ்வர ஜோதி நீ ;
கங்கிலா ஜோதிநீ; கற்பூர ஜோதியே .

தீபம் காட்டியபின் பழம், பொங்கல் ஆகியவை நைவேத்யம் செய்து கற்பூரத் தீபம் காண்பிக்கவேண்டும்.

## மங்களப் பாடல் :

மங்களமாம் அனைத்திற்கும் மங்களமே
சிவமே மக்கள் விழைநாற் பொருளும்
வழங்கு நல்தாயே எங்கள் புகழே
விழிமூன்று எய்தியவளே கௌரி
எழில் நாராயணி உன்னை வணங்கிடுவோம்
நம் தாயே நின்பதமலர் தரிசித்தோம்.

என்ற பாடலையும்,

யாமே நலம்பெற ஒளிபெற்றோமே
யாமே ஒளிபெற நலம்பெற்றோமே
யாமே நிறைநலம்பெற அருள்பொழிவாய் போற்றி

என்ற பாடலையும் பாடி, கற்பூரம் காண்பித்து, அந்த கற்பூரத்தைப் புஷ்பத்தால் சுற்றி திருவிளக்கின் பாதங்களில் இடவேண்டும். பிறகு கற்பூரத்தைக் கண்ணில் ஒற்றிக் கொள்ள வேண்டும். இதன்பிறகு,

ஏற்புடையாய் எழிலுடையாய் கற்புடையாய்
கண்ணுடையாய் நோற்புடையாய் நோன்புடையாய்
சீர்புடனே அருள்தருவாய் நின்னடி பணிந்தோம்
திருவிளக்கே நின்நிலைக்களம் எழுகவே.

என்ற பாடலை பக்தியுடன் பாடி, திருவிளக்கைச் சற்று, புஜை செய்பவர் தன்முன்பாக நகர்த்தி, அந்தத் திருவிளக்கில் முன்பு நிறுத்திய தெய்வம் ஏற்புடைய இடத்திற்கு எழுந்தருளட்டும் என்று வேண்டி, திருவிளக்கினைப் பணிந்து வணங்கி பூஜையை நிறைவுசெய்ய வேண்டும்.

- சுபமங்கலம் -

தமிழ் மாதந்தோறும் திருவிளக்கு வழிபாட்டின் பலன் :

ஒவ்வொரு தமிழ் மாதத்திலும், சூரிய சந்திரர்கள் ஒன்று சேரும் அமாவாசையன்றும், நேர் எதிரே சந்திக்கின்ற பௌர்ணமி அன்றும் திருவிளக்கு ஏற்றி, மகாலட்சுமியாக வழிபடுவது சிறப்பானது. இவ்வாறு வழிபடுவதால் உண்டாகும் பலன்கள் :

| | | |
|---|---|---|
| சித்திரை | - | தான்யவளம் உண்டாகும் |
| வைகாசி | - | செல்வம் பெருகும் |
| ஆனி | - | விவாக பலன் ஏற்படும் |
| ஆடி | - | ஆயுள் விருத்தியாகும் |
| ஆவணி | - | புத்திர சம்மபத்து உண்டாகும் |
| புரட்டாசி | - | பசுக்கள் விருத்தி |
| ஐப்பசி | - | பசிப்பிணி அகலும் |

கார்த்திகை - ஆரோக்கிய வாழ்வு அமையும்
மார்கழி - நற்கதி உண்டாகும்
தை - வாழ்க்கையில் வெற்றி கிட்டும்
மாசி - துன்பம் அகலும்
பங்குனி - தர்மசிந்தனை அமையும்.

பாராயணத்திற்கு உகந்த திருவிளக்கு பாடல்கள் :

இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி உள்ளது
பல்லக விளக்கது பலரும் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே

- திருநாவுக்கரசர்

விளக்கினை ஏற்றி வெளியை அறிமின்
விளக்கினின் முன்னே வேதனை மாறும்
விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள்
விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே.

- திருமூலர் (திருமந்திரம்)

## 4. மனிதர்களுக்கு நன்மை தரும் விஷயங்கள்

(தொகுப்பு சிவத்திரு A. இராஜேந்திரன்)

1. அதிகாலையில், துயில் எழுந்ததும் தமது வலது உள்ளங்கையைப் பார்ப்பது.
2. காலையில் குளித்தவுடன் கிழக்கு முகமாக நின்று சூரிய நமஸ்காரம் செய்வது.
3. ஆண்கள் காலையில் விளக்கேற்றி குலதெய்வம், இஷ்ட தெய்வம் மற்றும் முன்னோர்களை வழிபடுவது.
4. தினமும் உணவுக்கு முன் காக்கை, நாய், கோழி அல்லது பசு இவைகளுக்கு உணவிடுவது.
5. தினமும் ஆலயம் சென்று தெய்வ தரிசனம் செய்வது.
6. சமையல் அறையை வீட்டின் அக்னி மூலையில் அமைத்து, கிழக்கு முகமாக நின்று சமைப்பது.

7. குடும்பத்தில் பெண் கர்ப்பமாக இருக்கும்போது கிணறு எடுப்பது அல்லது ஆழ்குழாய் அமைப்பது இவைகளைத் தவிர்ப்பது.
8. ஒவ்வொருவரும் அவரவர் வசதிப்படி நெற்றியில் குங்குமம், விபூதி, செந்தூரம், சந்தனம், இவற்றில் ஒன்றை வைத்திருப்பது.
9. வீட்டில் தடுப்புச் சுவரில், அலமாரியில் ஒரு பக்கம் அடுப்பையும் மறுபக்கம் சுவாமி படத்தையும் வைக்காமலிருப்பது.
10. அமாவாசை, கிருத்திகை, அஷ்டமி, நவமி, பிரதமை,மரணயோகம் மற்றும் சனிக்கிழமை ஆகிய சமயங்களில் சுபகாரியங்களைத் தவிர்ப்பது.
11. தமிழ் மாதம் ஒன்றில் இரண்டு அமாவாசை அல்லது இரண்டு பௌர்ணமி வந்தால் அது மலமாதம் எனப்படுவதால் அம்மாதத்தில் சுபகாரியங்களைத் தவிர்ப்பது.
12. நோய்கள் நீங்க அதிகாலை மூன்று மணி முதல் ஆறு மணிக்குள் தினமும் திருக்கோயிலைச் சுற்றுவது.
13. நினைத்த காரியம் நிறைவேற பகலில் தினமும் திருக்கோயிலைச் சுற்றுவது.
14. செய்த பாவங்கள் மறைய தினமும் மாலையில் திருக்கோயிலைச் சுற்றுவது.
15. மோட்சம் கிட்டுவதற்கு தினமும் இரவில் திருக்கோயிலைச் சுற்றுவது.
16. திருமணமான பெண்கள் கர்ப்ப சம்பந்தமான தொல்லைகள் வராமல் இருக்க, தங்கள் கால்விரலில் வெள்ளியால் ஆன மெட்டியை அணிவது.
17. பெண்கள் பூசணிக்காய் உடைப்பதைத் தவிர்ப்பது.
18. பரணி, கிருத்திகை, திருவாதிரை, ஆயில்யம், மகம், பூரம்,சித்திரை, சுவாதி, விசாகம், கேட்டை, பூரம் மற்றும் பூரட்டாதி நட்சத்திரங்களில் கடன் கொடுக்காமலிருப்பது மற்றும் புதிய ஊர்ப்பயணம் செய்வதைத் தவிர்ப்பதும்.
19. வீட்டில் கிரகங்கள் ஆட்சிசெய்யும் இடங்கள் :

| | | |
|---|---|---|
| பூஜை செய்யுமிடம் | - | சூரியன் |
| நீர் நிலைகள் (கிணறு, குழாய்) | - | சந்திரன் |
| சமயலறை | - | அங்காரகன் |
| படிக்கும் அறை | - | புதன் |
| உக்கிராண அறை | - | குரு |

| | | |
|---|---|---|
| சயனிக்கும் அறை | - | சுக்கிரன் |
| குப்பை போடுமிடம் | - | சனி |

20. மார்கழி மாதம் தேவர்களுக்கு அதிகாலைப் பொழுதாகையால் அந்த மாதம் அனைத்து தெய்வங்களுக்கும் உகந்த மாதம். எனவே மார்கழி மாதம் அதிகாலை நீராடி, ஆலயம் சென்று இறைவனை வழிபட்டால் நமது துன்பங்கள் சிறிது சிறிதாக விலகி நன்மை கிட்டுவதுடன், இறைவனைக் கோடி நாட்கள் பூஜை செய்த பலன் கிட்டும்.

## 5. பெண்கள் தீர்க்க சுமங்கலிகளாகவும், தம்பதியர் நல்வாழ்வு பெறவும் அவரவர் நட்சத்திரத்திற்கேற்ப செய்ய வேண்டிய தானங்கள்

(தொகுப்பு சிவத்திரு. A. ராஜேந்திரன்)

| வ.எண். | நட்சத்திரம் | ஆண்கள் செய்ய வேண்டிய தானம் | பெண்கள் செய்ய வேண்டிய தானம் |
|---|---|---|---|
| 1. | அஸ்வினி | மஞ்சள் சாதம் | மஞ்சள் அரைத்து ஏதேனும் ஒரு கோயிலுக்கு அளித்தல் |
| 2. | பரணி | நெல்லிப்பொடி | கணபதி கோயிலில் அரைத்த சந்தனம் அளித்தல் |
| 3. | கார்த்திகை | வற்றல் குழம்பு | முருகன் கோயிலில் பழங்கள் அளித்தல் |
| 4. | ரோகிணி | தயிர் | அம்மன் கோயிலில் பால்தானம் செய்தல் |
| 5. | மிருகசீரிஷம் | பருப்பு | பெருமாள் கோயிலுக்கு துளசிமாலை அளித்தல் |
| 6. | திருவாதிரை | களி, கூழ் | சிவன் கோயிலில் குங்குமம் அளித்தல் |

| | | | |
|---|---|---|---|
| 7. | புனர்பூசம் | பால்சாதம் | கிருஷ்ணன் கோயிலுக்குத் திருவிளக்கு, மூங்கில்கள் அளித்தல் |
| 8. | பூசம் | சாம்பார் சாதம் | அரசமர நாகமிருக்கும் கோயிலில் பால் அளித்தல் |
| 9. | ஆயில்யம் | மோர் / வத்தல்குழம்பு | வன்னி விநாயகர் கோயிலில் மோதகம் அளித்தல் |
| 10. | மகம் | கீரை | ஆலமர விநாயகர் கோயிலில் கொழுக்கட்டை அளித்தல் |
| 11. | பூரம் | பலாப்பழ இனிப்பு சாதம் | முருகன் கோயிலில் பஞ்சாமிருதம் அளித்தல் |
| 12. | உத்திரம் | புளியோதரை | வைத்தீஸ்வரன் கோயிலில் கலவை சாதம் அளித்தல் |
| 13. | ஹஸ்தம் | தேங்காய் சாதம் | மூலவருக்கு மல்லிகைப்பூ தானம்(ஏதாவது ஒரு கோயிலில்) |
| 14. | சித்திரை | சர்க்கரைப் பொங்கல் | சிவன் கோயிலில் வில்வ மாலை அளித்தல் |
| 15. | சுவாதி | பருப்புப்பொடி சாதம் | அம்மன்கோயிலில் முல்லை மாலைஅளித்தல் |
| 16. | விசாகம் | கருவேப்பிலை பொடிசாதம் | கணபதி கோயிலில் விளாம்பழம், வெல்லம் சேர்த்து அளித்தல் |
| 17. | அனுஷம் | வெண்பொங்கல் | சிவன் கோயிலில் |

| | | | |
|---|---|---|---|
| | | | மகிழம்பூ அளித்தல் |
| 18. | கேட்டை | மாங்காய்சாதம் | சிவன் கோயிலில் தாமரைப்பூ அளித்தல் |
| 19. | மூலம் | அதிரசம் | பெருமாள் கோயிலில் தோசை அளித்தல் |
| 20. | பூராடம் | போளி | காலபைரவர் கோயிலில் உருளைக்கிழங்கு சாதம் அளித்தல் |
| 21. | உத்திராடம் | கடலை மாவு | எல்லை தேவதைக்கு இளநீர் அளித்தல் |
| 22. | திருவோணம் | அரிசி மாவு, கேசரி | எருக்குப் பூமாலை பிள்ளையார் கோயிலில் அளித்தல் |
| 23. | அவிட்டம் | அவல் | வன்னிமாலை பிள்ளையார் கோயிலில் அளித்தல் |
| 24. | சதயம் | சேவை | ஹயக்ரீவர் கோயிலில் சர்க்கரைப் பொங்கல் அளித்தல் |
| 25. | பூரட்டாதி | புட்டு | முருகன் கோயிலில் தேன், தினைமாவு அளித்தல் |
| 26. | உத்திரட்டாதி | உளுந்துபட்சணம் | கோயில் பசுவிற்குக் கீரை, பழம் அளித்தல் |
| 27. | ரேவதி | கொத்தமல்லி துவையல் சாதம் | அம்மன் கோயிலில் அடிப்பிரதக்ஷணம் செய்துஇனிப்பு தானம் |

## 6. வீடுகட்ட/குடிபுக வாஸ்து சாத்திர விவரங்கள்

*(தொகுப்பு சிவத்திரு. A.ராஜேந்திரன்)*

### வீடு

வீடுகட்ட பொன்னிறமான மண்வளம் கூடிய பூமி மிகவும் உகந்தது. சதுரம் அல்லது நீள் சதுரமனை நல்லது. நாம் தேர்வு செய்யும் இடம் தென்மேற்குப் பகுதி மேடாகவும், வடகிழக்கு சிறிது தாழ்ந்த இருத்தலும் மிகவும் அவசியம். வீடு கட்டும்போது பூஜை அறை வடகிழக்கிலும், (சுவாமி படம் கிழக்கு பார்த்து) சமயல் அறை தென்கிழக்கிலும், உணவு அறை மேற்கிலும், படுக்கை அறை தெற்கிலும், குளிக்கும்அறை கிழக்கிலும் அமைத்தல் வேண்டும்.

### மனை தேர்வு செய்த பிறகு வாஸ்து :

வாஸ்து புருஷன் நித்திரை விடும் தினத்தில் (ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி மாதங்கள் தவிர) நான்காவது மற்றும் ஐந்தாவது பாகங்களில் மனைபூஜை செய்தல் வேண்டும்.

### கிணறு அமைக்க :

சித்திரை, வைகாசி மற்றும் ஆனி மாதங்களில் வீட்டின் கிழக்கு, வடகிழக்கு அல்லது வடக்குத் திக்கில் அமைப்பது நல்லது. மேல்நிலை நீர்த்தொட்டி மேற்கு அல்லது தென்மேற்கு திசையில் வைப்பது நல்லது. தண்ணீர் பம்பு கிழக்கு, வடக்கு மற்றும் வடகிழக்குத் திசையில் அமைப்பது சிறப்பு.

### மரம் வகைகள் :

வீடு கட்டப் பயன்படும் மரவகைகளில் தேக்கு, மா மற்றும் வேம்பு ஆகியவை மிகவும் சிறந்தவை. பூவரசு, இலவம்பஞ்சு, ஆல், அத்தி ஆகிய மரங்கள் கூடாது.

### வீட்டின் முன்னும்,பின்னும் மரங்கள் :

வீட்டின் முன்பகுதியில் வேப்பமரம் மற்றும் புங்கை மரம் வளர்த்தலும், பின்பகுதியில் வாழைமரம், முருங்கை மரம் வளர்த்தலும் நல்லது. வீட்டுப் பகுதியில் அருகம்புல் வளர்ப்பதுஆரோக்கியத்தைத் தரும். துளசிச் செடியை வீட்டில் வளர்ப்பது நோயினைத் தவிர்க்கும்.

## வீட்டின் அளவு :

வீட்டின்நீளஅகலகங்கள்முறையே
6, 8, 10, 11, 16, 17, 20, 21, 22, 26, 27, 28, 29,30, 31, 32, 33, 35,36, 37, 39, 41, 42, 50, 52, 54, 56, 59, 60, 66, 68, 72, 73, 75, 77, 80, 84, 85, 88, 89, 90, 92, 95, 97, 99, 100.
அடிகளாக அமைவது உத்தமம்.

## கிரஹப்பிரவேசம் செய்ய :

மாதங்கள் : தை, மாசி, சித்திரை, வைகாசி, ஆவணி மற்றும் கார்த்திகை மாதங்கள் நன்மைதரும்.

கிழமைகள்: ஞாயிறு, திங்கள், புதன், வியாழன் மற்றும் வெள்ளி ஆகிய கிழமைகள் நலம்.

## நட்சத்திரங்கள் :

ரோகிணி, மிருகசீரிடம், பூசம், புனர்பூசம், உத்திரம், அஸ்தம், அனுஷம், உத்திராடம், திருவோணம், சதயம், உத்திராட்டதி மற்றும் ரேவதி ஆகிய நட்சத்திரங்கள் நலம் பயக்கும்.

மேல்நோக்கு நட்சத்திரங்கள் : ரோகிணி, திருவாதிரை, பூசம், திருவோணம், அவிட்டம், சதயம், சுவாதி மற்றும் உத்திராட்டாதி நட்சத்திரங்களில் சுபம் செய்யலாம். மனை மற்றும் வீடு வாங்கலாம். வீடு கட்டலாம்.

வாஸ்து நாட்கள் (1999 ஆம் வருடம்)

ஜனவரி 26 - காலை 10.41 முதல் 11.17 வரை
மார்ச் 6 - காலை 10.32 முதல் 11.08 வரை
ஏப்ரல் 23 - காலை 8.54 முதல் 9.30 வரை
ஜுன் 4 - காலை 9.58 முதல் 10.34 வரை
ஜுலை 27 - காலை 7.44 முதல் 8.20 வரை
ஆகஸ்டு 23 - காலை 7.23 முதல் 7.59 வரை
அக்டோபர்28- காலை 7.44 முதல் 8.20 வரை
நவம்பர் 24 - காலை 11.29 முதல் 12.05 வரை

மேற்குறித்த நாட்களில் அந்த நாட்களில் குறிப்பிட்ட நேரத்தில் மனைபூஜை செய்து வீடுகட்ட ஆரம்பித்தால் தடையின்றி விரைவில் வீடுகட்டலாம்.

# 7. ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்மர் தோத்திரம்

**(கடனைப் போக்கும் ஸ்ரீந்ருஸிமஹ வழிபாடு)**

**(தமிழ் விளக்கத்துடன்)**

**(தொகுப்பு சிவத்திரு. A. ராஜேந்திரன்)**

1. தேவதா கார்ய ஸித்யர்த்தம்
ஸபாஸதம்ப ஸ்முத்பவம்
ஸ்ரீ ந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே
2. லக்ஷ்ம்யா லிங்கித வாமாங்கம்
பக்தானாம் வரதாயகம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே
3. ஆந்த்ர மாலாதரம் சங்க
சக்ராப்ஜாயுத தாரிணம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே
4. ஸ்மரணாத் ஸர்வ பாபக்னம்
கத்ரூஜ விஷ நாசனம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே
5. ஸிம்ஹ நாதனே மஹதா
திக்தந்தி பயநாசனம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே
6. ப்ரஹ்லாத வரதம் ஸ்ரீசம்
தைத்யேச்வர விதாரணம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே
7. க்ருரக்ரஹை பீடிதானாம்
பக்தானாம் அபயப்ரதம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே
8. வேத வேதாந்த யக்ஞேசம்
ப்ரஹ்ம ருத்ராதி வந்திதம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே
9. ய இதம் படதே நித்யம்
ருண மோசன ஸம்ச்ஞிதம்
அந்ரூ ணீ ஜாயதே ஸத்யோ
தனம் சீக்ர மவாப் னுயாத்.

## தமிழ் விளக்கம்

1. தேவகாரியங்கள் பூரணத்துவம்பெற சபாமட்டத்தூணில் அவதரித்தவரே, மஹாவீரரே, என் கடன்களிலிருந்து என்னை விடுவிக்கும்படி வேண்டிக்கொண்டு நமஸ்கரிக்கின்றேன்.
2. மகாலக்ஷ்மியால் தழுவப்பெற்ற இடது பாகத்தை உடையவரே! பக்தர்கள் கேட்கும் வரத்தைத் தருபவரே! மஹாவீரரே ! என் கடன்களிலிருந்து என்னை விடுவிக்கும்படி பிரார்த்தித்துக் கொண்டு நமஸ்கரிக்கின்றேன்.
3. நரம்புகளை மாலையாக அணிந்து கொண்டவரே ! சங்கு, சக்கரம், தாமரை, ஆயுதம், இவைகளைத் தரித்துக் கொண்டவரே! மஹாவீரரே ! என்னைக் கடன் உபாதைகளிலிருந்து காத்தருள நமஸ்க்கரிக்கின்றேன்.
4. நினைத்த மாத்திரத்திலேயே பாபங்களை நீக்குபவரே! சத்ரு புத்திரர்களான நாகவிஷங்களால் ஆபத்து எற்படாமல் காப்பவரே! மஹாவீரரே! கடன் தொல்லையிலிருந்த விடுபட உம்மை நமஸ்கரிக்கின்றேன்.
5. சிம்மத்தின் கர்ஜனையைக் கேட்டால் யானைகள் அஞ்சி ஓடும். அப்பேர்ப்பட்ட பெரிய பயங்களையே போக்கும் மஹாவீரரே ! என் கடன் தொல்லைகளிலிருந்து நான் விடுதலை பெற உம்மை நமஸ்கரிக்கிறேன்.
6. பிரகலாதனுக்கு வரம் அளித்தவரே! லக்ஷ்மீபதியே, அசுரவேந்தனான இரண்யகசிபுவின் நெஞ்சைக் கிழித்தவரே, மஹாவீரரான நரசிம்ஹரே! என்கடன்களிலிருந்து விடுபட உம்மை நமஸ்கரிக்கின்றேன்.
7. குரூரமான க்ரஹ பார்வையால், கக்ஷ்டத்திலிருக்கும் பக்தர்களுக்கு உபயம் தருபவரே, மஹாவீரரான நரசிம்ஹரே, கடன் உபாதையிலிருந்த நிவாரணம் பெற உம்மை நமஸ்கரிக்கின்றேன்.
8. வேதம், உபநிஷத் யக்ஞம் இவைகளின் ஈச்வரனே, பிரம்மா, ருத்ரன் இவர்களால் நமஸ்கரிக்கப்பட்டவரே, மஹாவீரரான நரசிம்ஹரே, கடன்தொல்லைகளிலிருந்து விடுபட உம்மை நமஸ்கரிக்கின்றேன்.
9. குணமோசனம் என்ற இந்த ஸ்தோத்திரத்தை தினமும் மனமுருகிப் படிப்பவர்க்கு எவ்வளவு பெரிய கடனம் விரைவில் சூரிமனைக்கண்ட பனிமலையின் நிலையை அடையும். அதோடு மட்டுமல்லாமல், நியாயமான முறையில் சம்பத்தும் சேரும்.

- சுபம் -

## 8. காரிய சித்தி தரும் கணபதி தோத்திரம்

மூலமந்திரம் — தமிழில் பாடியவர்

காசிப முனிவர் — கச்சியப்ப முனிவர்

( வரிசை எண் 8 முதல் 16 வரை உள்ள பாராயணப் பகுதிகளை அவற்றின் மகிமை பற்றிய குறிப்பு எழுதி தொகுத்தவர் திரு. த.மு. இரவிச்சந்திரன்)

ஓங்கார வடிவான விநாயகப் பெருமானின் பெருமை கூறும் விநாயகப் புராணத்தில்; விநாயகரை, பிரம்மா - விஷ்ணு - சிவன் முதலாகிய பலர் உபாசனை செய்து அடைந்த நன்மைகள் உபாசனா காண்டத்திலும், விநாயகரின் திருவிளையாடல்கள் லீலா காண்டத்திலும் விவரிக்கப்பட்டுள்ளன. உபாசனா காண்டத்தில் ஒரு பகுதியாக வரும் 'காரிய சித்தி தரும் கணபதி தோத்திரம் ' காசிப முனிவர், விநாயகப் பெருமானைப் போற்றி, உள்ளம் உருகிப் பாடிய எட்டு பாடல்களாகும். மனம் இரங்கிய விநாயகப் பெருமான் இப்பாடல்களைப் பாராயணம் செய்பவர்களுக்குப் பல்வகைப் பலன்களை அருளினார். அந்தப் பலன்கள் ஒன்பதாம் மற்றும் பத்தாம் பாடல்களில் விவரிக்கப்படுகின்றன. தினமும் முப்போதும் மூன்று நாட்களும், தினமும் முப்போதும் எட்டுநாட்களும், சதுர்த்தி தோறும் எட்டுமுறையும், தினமும் பத்துமுறை இரண்டு திங்களும் ஆக இப்படிப் பல வகையில் பாராயணம் செய்பவர்கள் பெறுகின்ற சித்திகள் யாவை என்பது இத்தோத்திரத்திலேயே அருளப்பெற்றுள்ளது. காசிப முனிவர் இயற்றிய இந்த மூல மந்திரம் தமிழில் கச்சியப்ப முனிவரால் பாடப்பெற்றுள்ளது. பக்தர்கள் பாராயணம் செய்து விநாயகப் பெருமானின் அருளைப் பெற வேண்டுகிறோம்.

நூல்

பந்தம் அகற்றும் அநந்தகுணப்
பரப்பும் எவன்பால் உதிக்குமோ
எந்த உலகும் எவனிடத்தில்
ஈண்டி இருந்து சுரக்குமோ
சந்த மறைஆ கமங்கலைகள்
அனைத்தும் எவன்பால் தகவருமோ
அந்த இறையாம் கணபதியை
அன்பு கூரத் தொழுகின்றோம் 1

உலகம் முழுதும் நீக்கமற
ஒன்றாய் நிற்கும் பொருளெவனவ்
வுலகிற் பிறங்கும் விகாரங்கள்
உறாத மேலாம் ஒளியாவன்
உலகம் புரியும் வினைப்பயனை
ஊட்டுங் களைகண் எவன்அந்த
உலக முதலைக் கணபதியை
உவந்து சரணம் அடைகின்றோம் 2

இடர்கள் முழுதும் எவனருளால்
எரிவீ ழும்பஞ் செனமாயும்
தொடரும் உயிர்கள் எவனருளால்
சுரர்வாழ் பதியும் உறச்செய்யும்
கடவுள் முதலோர்க் கூறின்றிக்
கருமம் எவனால் முடிவுறும்அத்
தடவு மருப்புக் கணபதிபொன்
சரணம் சரணம் அடைகிறோம் 3

மூர்த்தி யாகித் தலமாகி
முந்நீர் கங்கை முதலான
தீர்த்த மாகி அறிந்ததறியாத்
திறத்தி னானும் உயிர்க்குநலம்
ஆர்த்தி நாளும் அறியாமை
அகற்றி அறிவிப் பான்எவன்அப்
போர்த்த கருணைக் கணபதியைப்
புகழந்து சரணம் அடைகின்றோம் 4

செய்யும் வினையின் முதல்யாவன்
செய்யப் படும்அப் பொருள்யாவன்
ஐயம் இன்றி உளதாகும்
அந்தக் கருமப் பயன்யாவன்
உய்யும் வினையின் பயன்விளைவில்
ஊட்டி விடுப்பான் எவன்அந்தப்
பொய்யில் இறையைக் கணபதியைப்
புரிந்து சரணம் அடைகின்றோம் 5

வேதம் அளந்தும் அறிவரிய
விகிர்தன் யாவன் விழுத்தகைய
வேத முடிவில் நடம் நவிலும்
விமலன் யாவன் விளங்குபர
நாதமுடிவில் வீற்றிருக்கும்
நாதன் எவன்எண் குணன்எவன்அப்
போதமுதலைக் கணபதியைப்
புகழ்ந்து சரணம் அடைகின்றோம் 6

மண்ணின் ஓர்ஐங் குணமாகி
வதிவான் எவன்நீர் இடைநான்காய்
நண்ணி அமர்வான் எவன்தீயின்
மூன்றாய் நவில்வான் எவன்வளியின்
எண்ணும் இரண்டு குணமாகி
இயைவான் எவன்வான் இடைஒன்றாம்
அண்ணல் எவன் அக் கணபதியை
அன்பிற் சரணம் அடைகின்றோம் 7

பாச அறிவில் பசு அறிவில்
பற்றற் கரிய பரன்யாவன்
பாச அறிவும் பசுஅறிவும்
பயிலப் பணிக்கும் அவன்யாவன்
பாச அறிவும் பசுஅறிவும்
பாற்றி மேலாம் அறிவான
தேசன் எவன்அக் கணபதியைத்
திகழச் சரணம் அடைகின்றோம் 8

நூற்பயன்

இந்த நமது தோத்திரத்தை
யாவன் மூன்றுதனமும்மைச்
சந்தி களில்தோத் திரஞ்செயினும்
சகல கரும சித்திபெறும்
சிந்தை மகிழச் சுகம்பெறும்எண்
தினம்உச் சரிக்கின் சதுர்த்தியிடைப்
பந்தம் அகலஓர் எண்கால்
பழக்கில் அட்ட சித்தியுறும் 9

திங்கள் இரண்டு தினந்தோறம்
        திகழ ஒருபான் முறையோதில்
தங்கும் அரச வசியமாம்
        தயங்க இருபத் தொருமுறைமை
பொங்கும் உழுவ லால்கிளப்பின்
        பொருவின் மைந்தர் விழுக்கல்வி
துங்க வெறுக்கை முதற்பலவும்
        தோன்றும் எனச்செப் பினர்மறைந்தார் 10

திருச்சிற்றம்பலம்

## விநாயகர் துதிப்பாடல்கள்

பாலுந் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான்தருவேன்- கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத் தமிழ் மூன்றுந் தா.

-ஔவையார் (நல்வழி)

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்- உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை.

- கபிலதேவ நாயனார்
(மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை)

ஐந்துகரத்தனை யானை முகத்தினை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே.

- திருமூலர் (திருமந்திரம்)

அற்புதக் கீர்த்தி வேண்டின்
        ஆனந்த வாழ்க்கை வேண்டின்
நற் பொருள் குவிதல் வேண்டின்
        நலமெலாம் பெருக வேண்டின்
கற்பக மூர்த்தி தெய்வக்

களஞ்சியம் இருக்கை சென்று
பொற்பதம் பணிந்து பாரீர்
பொய்யில்லை, கண்ட உண்மை
பிள்ளையார் பட்டி என்னும்
பேரருட் சுரங்கத்தின் கண்
உள்ளவன் மலையிற் பூத்த
உருவத்தின் இயற்கைத் தோன்றல்
தெள்ளிய மனத்தார்க் கெல்லாம்
திருவருள் வழங்கும் தெய்வம்
கள்ள மில்லா பக்தர் தந்தை
கற்பக மூர்த்தி அன்றோ.

- பிள்ளையார்பட்டி பெருமானின் பெருமை
**(கண்ணதாசன்)**

## 9. அபிராமி அந்தாதி

(அருளியவர் : அபிராமிபட்டர்)

கலைவளம் மிகவும் கொண்டு புகழ்வாய்ந்த தஞ்சை மயிலாடுதுறைக்கு அருகில் உள்ள திருக்கடையூர் திருப்பதியில் சுமார் 270 வருடங்களுக்கு முன்பு வாழ்ந்து வந்தவர் சுப்பிரமணியம் என்ற இயற்பெயர் பெற்ற இறையன்பர். திருக்கடையூர் உறையும் அமிர்த கடேசுவரர் உடனுறை அபிராமிவல்லி அன்னையிடம் அளவற்ற பக்திகொண்டு தொண்டாற்றி வந்தவர். சோதிடக் கலையில் வல்லவராகையால், தஞ்சையை ஆண்டுவந்த இரண்டாம் சரபோஜி மன்னரின் அவையில் சோதிடப்பணியாற்றி வந்தார். அன்னை அபிராமவல்லியை நினைந்து அடிக்கடி யோக நிட்டையில் ஆழ்ந்து விடுவது இவர் வழக்கம். இவரின் மேல் பொறாமை கொண்ட சிலர் மன்னரிடம் அவ்வப்போது புகார் செய்துவந்தனர். ஒருநாள் வழிபாட்டிற்காக ஆலயம் வந்த மன்னர் அங்கு இவர் யோகத்தில் இருப்பதைக் கண்டு, இவரின் யோகத்தைக் கலைத்து மறுநாள் என்ன திதி என வினவினார். தன்னை மறந்திருந்த பக்தரும், பௌர்ணமி திதி என விடையளித்தார். (உண்மையில் அமாவாசை திதி). இதனால் கோபமுற்ற மன்னர் மறுநாள் இரவு பௌர்ணமி முழு நிலவினைக் காட்ட வேண்டுமெனவும், தவறினால் மரண தண்டனை எனவும் உத்தரவிட்டார்.

மறுநாள், நூறு கால்கள் கொண்ட உறியில் இவரை ஏற்றி கீழே அக்கினி வளர்க்கச் செய்த மன்னர், உறியின் ஒவ்வொரு காலையும்

எடுத்துக்கொண்டு வருமாறும், நூறாவது காலை எடுத்ததும் இவர் அக்கினியில் விழுந்து மரணதண்டனை பெற வேண்டும் எனவும் ஆணையிட்டார். எதற்கும் கலங்காத பக்தரோ அபிராமி அன்னையைத் தியானித்து உள்ளம் உருக அந்தாதி வடிவில் பாக்களையே பூக்களாக்கி அன்னையை அர்ச்சிக்க ஆரம்பிததார். எழுபத்தொன்பதாவது பாடலை 'விழிக்கே அருளுண்டு' எனத் துவங்கிப் பாடியபோது அன்னை மனமிரங்கி தனது வலது கரத்தால், இடது காதில் அணிந்திருந்த குண்டலத்தினை எடுத்து வானில் வீச, அதுவே முழுநிலவாய் வானில் ஒளிவீசியது. அன்னை பிரசன்னமாகி இவரை மேலும் பாடப்பணித்தார். இவரும் நூறு பாடல்களைப் பாடிமுடிக்க, இவர் பெருமை உணர்ந்த மன்னரும், மற்றவர்களும் தங்கள் பிழையைப் பொறுத்தருள வேண்டினர். அன்று முதல் இவர் அபிராமி பட்டர் என அழைக்கப்பட்டார். இவர் பாடிய பாக்கள் நூறும் அபிராமி அந்தாதி என வழங்கப்பட்டது. அன்னை அபிராம வல்லியை மனமுருக வேண்டி இப்பாக்களைப் பாராயணம் செய்யும் பக்தர்கள் அடையும் நன்மைகள் கற்பனைக்கும் எட்டாத அற்புதங்களாகும். இப்பெருமை பொருந்திய அபிராமி அந்தாதியின் பாடல் ஒவ்வொன்றும் அவை தரும் பலன் பற்றிய விவரங்களுடன் இங்கு வழங்கப்பட்டுள்ளன. பக்தர்கள் பாராயணம் செய்து, எல்லாம் வல்ல அமிர்தகடேசுவரர் உடனுறையும் அபிராம வல்லி அம்மையின் பரிபூரண அருளைப் பெற அன்னையின் பதம்பணிந்து வேண்டுகிறோம்.

*சிவமயம்*

*அபிராமி பட்டர் அருளிய*

# அபிராமி அந்தாதி

## காப்பு

தாரமர் கொன்றையும் சண்பக மாலையும் சாத்தும்தில்லை
ஊரர்தம் பாகத்(து) உமை மைந்த னேஉல(கு) ஏழும் பெற்ற
சீரபி ராமிஅந் தாதிஎப் போதும் என் சிந்தையுள்ளே
காரமர் மேனிக் கணபதி யேநிற்கக் கட்டுரையே.

## நூல்

## நல்வித்தையும் ஞானமும் பெற

உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகம் உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக் குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனி அபிராமி என்றன் விழுத்துணையே. 1

## பிரிந்தவர் ஒன்று சேர

துணையும் தொழுந்தெய்வமும் பெற்ற தாயும் சுருதிகளின்
பணையும் கொழுந்தும் பதிகொண்ட வேரும் பனிமலர்ப்பூங்
கணையும் கருப்புச் சிலையுமென் பாசாங் குசமும்கையில்
அணையும் திரிபுர சுந்தரி யாவ(து) அறிந்தனமே. 2

## குடும்ப பந்தம் நீங்க

அறிந்தேன் எவரும் அறியா மறையை அறிந்துகொண்டு
செறிந்தேன் உனது திருவடிக் கேதிரு வேவெருவிப்
பிறிந்தேன்நின் அன்பர் பெருமை எண்ணாத கருமநெஞ்சால்
மறிந்தே விழுநர குக்குற வாய மனிதரையே. 3

## உயர்பதவிகள் அடைய

மனிதரும் தேவரும் மாயா முனிவரும் வந்துசென்னி
குனிதரும் சேவடிக் கோமளமே கொன்றை வார்சடைமேல்
பனிதரும் திங்களும் பாம்பும் பகீரதி யும்படைத்த
புனிதரும் நீயும்என் புந்திஎந் நாளும் பொருந்துகவே. 4

## மனக்கவலை தீர

பொருந்திய முப்புரை செப்புரை செய்யும் புணர்முலையாள்
வருந்திய வஞ்சி மருங்குல் மனோன்மணி வார்சடையோன்
அருந்திய நஞ்(சு)அமு தாக்கிய அம்பிகை அம்புயமேல்
திருந்திய சுந்தரி அந்தரி பாதம்என் சென்னியதே. 5

## மந்திரசித்தி பெற

சென்னிய(து) உன்பொன் திருவடித் தாமரை சிந்தையுள்ளே
மன்னிய(து) உன்திரு மந்திரம் சிந்தூர வண்ணப்பெண்ணே
முன்னிய நின் அடி யாருடன் கூடி முறைமுறையே
பன்னிய(து) என்றும்உன் றன்பர மாகம பத்ததியே. 6

## மலையென வருந்துன்பம் பனியென நீங்க

ததியுறு மத்திற் சுழலும்என் ஆவி தளர்விலதோர்
கதியுறு வண்ணம் கருதுகண் டாய்கம லாலயனும்
மதியுறு வேணி மகிழ்நனும் மாலும் வணங்கிஎன்றும்
துதியுறு சேவடி யாய்சிந்து ரானன சுந்தரியே. 7

## சகல பாசமும் நீங்கித் துறவறம் சித்திக்க

சுந்தரி எந்தை துணைவிஎன் பாசத் தொடரைஎல்லாம்
வந்தரி சிந்தூர வண்ணத்தி னாள்மகி டன்தலைமேல்
அந்தரி நீலி அழியாத கன்னிகை ஆரணத்தோன்
சுந்தரி கைத்தலத் தாள்மலர்த் தாள்என் கருத்தனவே. 8

## சர்வ வசியம் உண்டாக

கருத்தன எந்தைதன் கண்ணன வண்ணக் கணகவெற்பிற்
பெருத்தன பால்அழும் பிள்ளைக்கு நல்கின பேரருள்கூர்
திருத்தன பாரமும் ஆரமும் செங்கைச் சிலையும்அம்பும்
முரத்தன மூரலும் நீயும்அம் மேவந்தென் முன்நிற்கவே. 9

## மோட்ச சாதனம் பெற

நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்ப(து) உன்னை
என்றும் வணங்குவ(து) உன்மலர்த் தாள்எழு தாமரையின்
ஒன்றும் அரும்பொரு ளேஅரு ளேஉமை யேஇமயத்(து)
அன்றும் பிறந்தவ ளேஅழி யாமுத்தி ஆனந்தமே. 10

## இல்வாழ்க்கையில் இன்பம் பெற

ஆனந்த மாய்என் அறிவாய் நிறைந்த அமுதமுமாய்
வானந்த மான வடி(வு)உடை யாள்மறை நான்கினுக்கும்
தானந்த மான சரணார விந்தம் தவளநிறக்
கானந்தம் ஆடரங் காம்எம்பி ரான்முடிக் கண்ணியதே. 11

## நெஞ்சம் தியானத்தில் நிலைபேறு அடைய

கண்ணிய(து) உன்புகழ் கற்ப(து)உன் நாமம் கசிந்துபத்தி
பண்ணிய(து) உன்இரு பாதாம் புயத்தில் பகல்இரவா
நண்ணிய(து) உன்னைநயந்தோர் அவையத்து நான்முன் செய்த
புண்ணியம் ஏ(து)என்அம் மேபுவி ஏழையும் பூத்தவளே. 12

## வைராக்கிய நிலை எய்த

பூத்தவ ளேபுவ னம்பதி னான்கையும் பூத்தவண்ணம்
காத்தவ ளேபின் கரந்தவ ளேகறைக் கண்டனுக்கு
மூத்தவ ளேஎன்றும் மூவா முகுந்தற்(கு) இளையவளே
மாத்தவ ளேஉன்னை அன்றிமற் றோர்தெய்வம் வந்திப்பதே. 13

## தலைமை பெற

வந்திப் பவர்உன்னை வானவர் தானவர் ஆனவர்கள்
சிந்திப் பவர்நல் திசைமுகர் நாரணர் சிந்தையுள்ளே
பந்திப் பவர்அழி யாப்பர மானந்தர் பாரில் உன்னைச்
சந்திப் பவர்க்(கு)எளி தாம்எம் பிராட்டிநின் தண்ணனியே. 14

## பெருஞ்செல்வமும் பேரின்பமும் பெற

தண்ணளிக் கென்றுமுன் னேபலகோடி தவங்கள் செய்வார்
மண்ணளிக் கும்செல்வ மோபெறு வார்மதி வானவர்தம்
விண்ணளிக் கும்செல் வமும் அழி யாமுத்தி வீடுமன்றோ
பண்ணளிக் கும்சொல் பரிமள யாமளைப் பைங்கிளியே. 15

## முக்காலமும் உணரும் ஆற்றல் உண்டாக

கிளியே கிளைஞர் மனத்தே கிடந்து கிளர்ந்தொளிரும்
ஒளியே ஒளிரும் ஒளிக்கிட மேஎண்ணில் ஒன்றுமில்லா
வெளியே வெளிமுதல் பூதங்களாகி விரிந்த அம்மே
அளியேன் அறிவள விற்(கு)அள வான(து) அதிசயமே. 16

## கன்னிகைகளுக்கு நல்ல வரன் கிடைக்க

அதிசய மான வடி(வு)உடையாள் அர விந்தமெல்லாம்
துதிசய ஆனனசுந்தர வல்லி துணைஇரதி
பதிசய மான(து) அபசய மாகமுன் பார்த்தவர்தம்
மதிசய மாகவன் றோவாம பாகத்தை வவ்வியதே. 17

## மரணபயம் நீங்க

வவ்விய பாகத்(து) இறைவரும் நீயும் மகிழ்ந்திருக்கும்
செவ்வியும் உங்கள் திருமணக் கோலமும் சிந்தையுள்ளே
அவ்வியத் தீர்த்தேன்னை ஆண்டபொற் பாதமும் ஆகிவந்து
வெவ்விய காலன்என் மேல்வரும் பொது வெளிநிற்கவே. 18

## பேரின்பம் உண்டாக

வெளிநின்ற நின்திரு மேனியைப் பார்த்தென்விழியும் நெஞ்சும்
களிநின்ற வெள்ளம் கரைக்கண்ட தில்லை கருத்தினுள்ளே
தெளிநின்ற ஞானம் திகழ்கின்ற தென்ன திருவுளமோ
ஒளிநின்ற கோணங்கள் ஒன்பதும் மேவி உறைபவளே. 19

## வீடுவாசல் முதலிய செல்வங்கள் உண்டாக

உறைகின்ற நின்திருக் கோயில்நின் கேள்வர் ஒருபக்கமோ
அறைகின்ற நான்மறை யின்அடி யோமுடி யோஅமுதம்
நிறைகின்ற வெண்திங்க ளோகஞ்ச மோஎன்றன் நெஞ்சகமோ
மறைகின்ற வாரிதி யோபூர ணாசலமங்கலையே. 20

## அம்பிகைக்கு செய்த அபசார தோஷம்நீங்க

மங்கலை செங்கல சம்முலை யால்மலை யாள்வருணச்
சங்கலை செங்கைச் சகல கலாமயில் தாவுகங்கை
பொங்கலை தங்கும் புரிசடை யோன்புடை யாளுடையாள்
பிங்கலை நீலிசெய் யாள்வெளி யாள்பசும் பெண்கொடியே. 21

## பிறவிப் பிணி தீர

கொடியே இளவஞ்சிக் கொம்பே எனக்குவம் பேபழுத்த
படியே மறையின் பரிமள மேபனி மாலிமயப்
பிடியே பிரமன் முதலாய தேவரைப் பெற்றஅம்மே
அடியேன்இறந்(து)இங்(கு)இனிப்பிறவாமல்வந்(து)ஆண்டுகொள்ளே. 22

## மனச் சஞ்சலம் உண்டாகாதிருக்க

கொள்ளேன் மனத்தில்நின் கோலம்அல் லா(து) அன்பர் கூட்டந்தன்னை
விள்ளேன் பரசம யம்விரும் பேன்வியன் மூவுலகுக்(கு)
உள்ளே அனைத்தினுக் கும்புறம் பேஉள்ளத் தேவிளைந்த
கள்ளே களிக்குங் களியே அருளியஎன் கண்மணியே. 23

## தீராத வியாதிகள் தீர

மணியே மணியின் ஒளியே ஒளிரும் மணிபுனைந்த
அணியே அணியும் அணிக்கழ கேஅணு காதவர்க்குப்
பிணியே பிணிக்கு மருந்தே அமரர் பெருவிருந்தே
பணியேன் ஒருவரை நின்பத்ம பாதம் பணிந்தபின்னே. 24

## நினைத்த காரியம் இடையூறின்றி ஈடேற

பின்னே திரிந்துஉன் அடியாரைப் பேணிப் பிறப்பறுக்க
முன்னே தவங்கள் முயன்றுகொண் டேன்முதல் மூவருக்கும்
அன்னே உலகுக்(கு) அபிராமி என்னும் அருமருந்தே
என்னே இனிஉன்னை யான்மற வாமல்நின்(று) ஏத்துவனே. 25

## சொல்வன்மையும் செல்வாக்கும் பெருக

ஏத்தும் அடியவர் ஈரே ழுலகினை யும்படைத்தும்
காத்தும் அழித்தும் திரிபவ ராம்கமழ் பூங்கடம்பு
சாத்தும் குழல் அணங் கேமணம் நாறும்நின் தாள் இணைக்(கு)என்
நாத்தங்கு புன்மொழி ஏறிய வாறு நகையுடைத்தே. 26

## மனநோய் தீர

உடைத்தனை வஞ்சப் பிறவியை உள்ளம் உருகும் அன்பு
படைத்தனை பத்ம பதயுகம் சூடும் பணிஎனக்கே
அடைத்தனை நெஞ்சத்(து) அழுக்கைஎல் லாம்நின் அருட்புனலால்
துடைத்தனை சுந்தரி நின்னருள் ஏதென்று சொல்லுவதே. 27

## இகபர சுகங்களைப் பெற

சொல்லும் பொருளும் எனநட மாடும் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடி யேநின் புதுமலர்த்தாள்
அல்லும் பகலும் தொழும்அவர்க் கேஅழி யாஅரசும்
செல்லும் தவநெறி யும்சிவ லோகமும் சித்திக்குமே. 28

## அணிமாதி அஷ்ட சித்திகளைப் பெற

சித்தியும் சித்தி தருந்தெய்வ மாகித் திகழும்பரா
சத்தியும் சத்தி தழைக்கும் சிவமும் தவம்முயல்வார்
முத்தியும் முத்திக்கு வித்தும்வித் தாகி முளைத்தெழுந்த
புத்தியும் புத்தியின் உள்ளே புரக்கும் புரத்தையன்றே. 29

## அடுத்தடுத்து வரும் ஆபத்துக்கள் நீங்க

அன்றே தடுத்(து) என்னை ஆண்டுகொண் டாய்கொண்ட(து) அல்லவென்கை
நன்றே உனக் கினி நானென் செயினும் நடுக்கடலுள்
சென்றே விழினும் கரையேற் றுகைநின் திருவுளமே
ஒன்றே பலவுரு வேயரு வேஎன் உமையவளே. 30

## மறுமையில் இன்பம் உண்டாக

உமையும் உமையொரு பாகனும் ஏகஉருவில்வந்திங்(கு)
எமையும் தமக்கன்பு செய்யவைத் தார்இனி எண்ணுதற்குச்
சமையுங் களுமில்லை ஈன்றெடுப் பாள்ஒரு தாயும் இல்லை
அமையும் அமையுறு தோளியர் மேல்வைத்த ஆசையுமே. 31

## அகால மரணமும் துர்மரணமும் உண்டாகாதிருக்க

ஆசைக் கடலில் அகப்பட்(டு) அருளற்ற அந்தகன்கைப்
பாசத்தில் அல்லல் படஇருந் தேனைநின் பாதம் என்னும்
வாசக் கமலம் தலைமேல் வலியவைத்(து) ஆண்டு கொண்ட
நேசத்தை என்சொல்லு வேன்ஈசர் பாகத்து நேரிழையே. 32

## மரணாவஸ்தையிலும் அம்பிகையின் நினைவு அகலாதிருக்க

இழைக்கும் வினைவழி யேஅடும் காலன் எனைநடுங்க
அழைக்கும் பொழுதுவந்(து) அஞ்சல்என் பாய்அத்தர் சித்தம்எல்லாம்
குழைக்கும் களபக் குவிமுலை யாமளைக் கோமளமே
உழைக்கும் பொழுதுஉன்னை யேஅன்னை யேஎன்பன் ஓடிவந்தே. 33

## பயிர் செய்ய ஏற்ற சிறந்த நிலபுலன்கள் கிடைக்க

வந்தே சரணம் புகும்அடி யாருக்கு வான்உலகம்
தந்தே பரிவொடு தான்போய் இருக்கும் சதுர்முகமும்
பைந்தேன் அலங்கல் பருமணி ஆகமும் பாகமும்பொன்
செந்தேன் மலரும் அலர்கதிர் ஞாயிறும் திங்களுமே. 34

## கடிமணம் நிகழ

திங்கட் பசுவின் மணம்நாறும் சீறடி சென்னிவைக்க
எங்கட்(கு) ஒருதவம் எய்திய வாஎண் ணிறந்த விண்ணோர்
தங்கட்கும் இந்தத் தவமெய்து மோதரங் கக்கடலுள்
வெங்கட் பணியணை மேல்துயில் கூரும் விழுப்பொருளே. 35

## தொல்வினைகள் தொலைந்து போக

பொருளேபொருள்முடிக் கும்போக மேஅரும் போகம் செய்யும்
மருளே மருளில் வருந்தெருளேஎன் மனத்துவஞ்சத்(து)
இருளேதும் இன்றி ஒளிவெளியாகி இருக்கும்உன்றன்
அருளே(து) அறிகின்றி லேன் அம்புயாதனத்(து) அம்பிகையே. 36

## நவரத்தினம் அடையும் நல்லூழ் பெற

கைக்கே அணிவது கன்னலும் பூவும் கமலம் அன்ன
மெய்க்கே அணிவது வெண்முத்து மாலை விடஅரவின்
பைக்கே அணிவது பன்மணிக் கோவையும் பட்டும் எட்டுத்
திக்கே அணியும் திருவுடை யான்இடம் சேர்பவளே. 37

## வேண்டிய பொருளை வேண்டியபடியேஅடைய

பவளக் கொடியில் பழுத்த செவ்வாயும் பனிமுறுவல்
தவளத் திருநகை யும்துணை யாஎங்கள் சங்கரனைத்
துவளப் பொருது துடியிடை சாய்க்கும் துணைமுலையாள்
அவளைப் பணிமின்கண் டீர்அம ராவதி ஆளுகைக்கே. 38

## ஆயுதப் பயிற்சியில் தேர்ச்சி பெற

ஆளுகைக்(கு) உன்றன் அடித்தா மரைகள் உண்(டு) அந்தகன்பால்
மீளுகைக்(கு) உன்றன் விழியின் கடையுண்டு மேல்இவற்றின்
மூளுகைக்(கு) என்குறை நின்குறை யேஅன்று முப்புரங்கள்
மாளுகைக்(கு) அம்பு தொடுத்தவில் லான்பங்கில் வாள்நுதலே. 39

## பூர்வ புண்ணியம் தடையின்றிப் பலன்தர

வாணுதல் கண்ணியை விண்ணவர் யாவரும் வந்திறைஞ்சிப்
பேணுதற்(கு) எண்ணிய எம்பெரு மாட்டியைப் பேதைநெஞ்சில்
காணுதற்(கு) அண்ணியள் அல்லாத கன்னியைக் காணும் அன்பு
பூணுதற்(கு) எண்ணிய எண்ணம் அன்றோ? முன்செய் புண்ணியமே. 40

## அடியார் உறவு பெற

புண்ணியம் செய்தன மேமன மேபுதுப் பூங்குவளைக்
கண்ணியும் செய்ய கணவரும் கூடிநம் காரணத்தால்
நண்ணிஇங் கேவந்து தம்மடி யார்கள் நடுவிருக்கப்
பண்ணிநம் சென்னியின் மேல்பத்ம பாதம் பதித்திடவே. 41

## உலகம் நமக்கு வசியப்பட்டிருக்க

இடங்கொண்டு விம்மி இணைகொண்(டு) இறுகி இளகிமுத்து
வடங்கொண்ட கொங்கை மலைகொண்(டு) இறைவர் வலியநெஞ்சை
நடங்கொண்ட கொள்கை நலங்கொண்ட நாயகி நல்வரவின்
படங்கொண்ட அல்குல் பனிமொழி வேதப் பரிபுரையே. 42

## தீமையெல்லாம் ஒழிய

பரிபுரச் சீறடி பாசாங் குசைபஞ்ச பாணிஇன்சொல்
திரிபுர சுந்தரி சிந்துர மேனியள் தீமைநெஞ்சில்
புரிபுர வஞ்சரை அஞ்சக் குனிபொருப் புச்சிலைக்கை
எரிபுரை மேனி இறைவர்செம் பாகத்(து) இருந்தவளே. 43

## பேதபுத்தி நீங்க

தவளே இவள்எங்கள் சங்கர னார்மனை மங்கலமாம்
அவளே அவர்தமக்(கு) அன்னையும் ஆயினள் ஆகையினால்
இவளே கடவுளர் யாவருக்கும் மேலை இறைவியும் ஆம்
துவளேன் இனியொரு தெய்வமுண் டாகமெய்த்தொண்டுசெய்வதே. 44

## உலக அபவாதம நீங்க

தொண்டுசெய் யாது நின்பாதம் தொழாது துணிந்திச்சையே
பண்டுசெய் தார்உள ரோஇல ரோஅப் பரிசடியேன்
கண்டுசெய் தால்அது கைதவமோ அன்றிச் செய்தவமோ
மிண்டுசெய் தாலும் பொறுக்கைநன் றேபின் வெறுக்கையன்றே. 45

## எல்லாவிதமான நடத்தை தோஷங்களும் தீர

வெறுக்கும் தகைமைகள் செய்யினும் தம்மடி யாரைமிக்கோர்
பொறுக்கும் தகைமை புதியதன் றேபுது நஞ்சைஉண்டு
கறுக்கும் திருமிடற் றான் இடப் பாகம் கலந்தபொன்னே
மறுக்கும் தகைமைகள் செய்யினும் யான்உன்னை வாழ்த்துவனே 46

## யோகசித்தி பெற

வாழும் படியொன்று கண்டுகொண் டேன்மனத் தேயொருவர்
வீழும் படியன்று விள்ளும் படியன்று வேலைநிலம்
ஏழும் பருவரை எட்டும்எட்டாமல் இரவுபகல்
சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே. 47

## சரீரப் பற்று நீங்க

சுடரும் கலைமதி துன்றும் சடைமுடிக் குன்றில் ஒன்றிப்
படரும் பரிமளப் பச்சைக் கொடியைப் பதித்து நெஞ்சில்
இடரும் தவிர்திமைப் போதிருப் பார்ப்பின்னும் எய்துவரோ
குடரும் கொழுவும் குருதியும் தோயும் குரம்பையிலே. 48

## மரணாவஸ்தை இல்லாது ஒழிய

குரம்பை அடுத்துக் குடிபுக்க ஆவிவெங் கூற்றுக்கிட்ட
வரம்பை அடுத்து மறுகும்அப் போது வளைக்கை அமைத்(து)
அரம்பை அடுத்த அரிவையர் சூழவந்(து) அஞ்சல்என்பாய்
நரம்பை அடுத்த இசைவடி வாய்நின்ற நாயகியே. 49

## அம்பிகையை நேரில் தரிசிக்க

நாயகி நான்முக நாராயணிகை நளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதிநச்சு
வாயகி மாலினி வாராகி சூலினி மாதங்கிஎன்(று)
ஆயகி யாதி உடையாள் சரணம் அரண்நமக்கே. 50

## மோகம் நீங்க

அரணம் பொருள் என்று அருள் ஒன் றிலாத அசுரர்தங்கள்
முரண் அன்(று) அழிய முனிந்தபெம் மானும் முகுந்தனுமே
சரணம் சரணம் எனநின்ற நாயகி தன்னடியார்
மரணம் பிறவி இரண்டும்எய் தார்இந்த வையகத்தே. 51

## இம்மையில் பெருஞ்செல்வம் உண்டாக

வையம் துரகம் மதகரி மாமகு டம்சிவிகை
பெய்யும் கனகம் பெருவிலை ஆரம் பிறைமுடித்த
ஐயன் திருமனை யாள் அடித் தாமரைக்(கு) அன்புமன்பு
செய்யும் தவம்உடை யார்க்குள வாகிய சின்னங்களே. 52

## மாயை அகல

சின்னஞ் சிறிய மருங்கினில் சாத்திய செய்யபட்டும்
பென்னம் பெரிய முலையும்முத் தாரமும் பிச்சிமொய்த்த
கன்னங் கரிய குழலும்கண் மூன்றும் கருத்தில்வைத்துத்
தன்னந் தனியிருப் பார்க்கிது போலும் தவமில்லையே. 53

## கடன்தொல்லைகள் தீர

இல்லாமை சொல்லி ஒருவர்தம் பால்சென்(று) இழிவுபட்டு
நில்லாமை நெஞ்சில் நினைகுவி ரேல்நித்தம் நீடுதவம்
கல்லாமை கற்ற கயவர்தம் பால்ஒரு காலத்திலும்
செல்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே. 54

## விருப்பு வெறுப்பற்ற மோனநிலை எய்த

மின்னா யிரம் ஒருமெய்வடி வாகி விளங்குகின்ற(து)
அன்னாள் அகமகிழ் ஆனந்த வல்லி அருமைறைக்கு
முன்னாய் நடுவெங்கு மாய்முடி வாய முதல்விதன்னை
உன்னா(து) ஒழியினும் உன்னினும் வேண்டுவ(து) ஒன்றிலையே. 55

## யாவரையும் வசீகரிக்கும் ஆற்றல் உண்டாக

ஒன்றாய் அரும்பிப் பலவாய் விரிந்(து) இவ் வுலகெங்குமாய்
நின்றாள் அனைத்தையும் நீங்கிநிற் பாள்என்றன்நெஞ்சினுள்ளே
பொன்றாது நின்று புரிகின்ற வாஇப் பொருள் அறிவார்
அன்றா லிலையில் துயின்றபெம் மானும்என் ஐயனுமே. 56

## வறுமை ஒழிய

ஐயன் அளந்த படியிரு நாழிகொண்(டு) அண்டம்எல்லாம்
உய்ய அறம்செயும் உன்னையும் போற்றி ஒருவர்தம்பால்
செய்ய பசுந்தமிழ் பாமாலை யுங்கொண்டு சென்றுபொய்யும்
மெய்யும் இயம்பவைத் தாய்இது வோஉன்றன் மெய்யருளே. 57

## இறையுணர்வால் மன அமைதி பெற

அருணாம் புயத்தும்என் சித்தாம் புயத்தும் அமர்ந்திருக்கும்
தருணாம் புயமுலைத் தையல்நல் லாள்தகை சேர்நயனக்
கருணாம் புயமும் வதனாம் புயமும் கராம்புயமும்
சரணாம் புயமும் அல் லாற்கண்டி லேன்ஒரு தஞ்சமுமே. 58

## தூர்நடத்தை உள்ள பிள்ளை நல்லவனாக

தஞ்சம் பிறிதில்லை ஈதல்ல தென்றுன் தவநெறிக்கே
நெஞ்சம் பயில நினைக்கின்ற லேன்ஒற்றை நீள்சிலையும்
அஞ்சம்பும் இக்(கு) அலர் ஆகநின் றாய்அறி யார்எனினும்
பஞ்சஞ்சும் மெல்லடி யார்அடி யார்பெற்ற பாலரையே. 59

## மெய்யுணர்வு தோன்ற

பாலினும் சொல்இனி யாய்பனி மாமலர்ப் பாதம்வைக்க
மாலினும் தேவர் வணங்கநின் றோன்கொன்றைவார்சடையின்
மேலினும் கீழ்நின்று வேதங்கள் பாடும்மெய்ப் பீடம்ஒரு
நாலினும் சாலநன் றோஅடியேன்முடை நாய்த்தலையே. 60

## மாயை அகன்று உண்மை உணர்வு உண்டாக

நாயே னையும் இங்(கு) ஒருபொரு ளாக நயந்து வந்து
நீயே நினைவின்றி யாண்டுகொண் டாய்நின்னை உள்ளவண்ணம்
பேயேன் அறியும் அறிவுதந் தாய்என்ன பேறுபெற்றேன்
தாயே மலைமக ளேசெங்கண் மால்திருத் தங்கச்சியே 61

## எத்தகைய அச்சமும் அகல

தங்கச் சிலைகொண்டு தானவர் முப்புரம் சாயத்துமத
வெங்கண் கரியுரி போர்த்தசெஞ் சேவகன் மெய்யடையக்
கொங்கைக் குரும்பைக் குறியிட்ட நாயகி கோகனகச்
செங்கைக் கரும்பும் அலரும்எப் போதும்என் சிந்தையதே. 62

## நல்லறிவு உண்டாக

தேறும் படிசில ஏதுவும் காட்டிமுன் செல்கதிக்குக்
கூறும் பொருள்குன்றில் கொட்டும் தறிகுறிக் கும்சமயம்
ஆறும் தலைவி இவளாய் இருப்ப(து) அறிந்திருந்தும்
வேறும் சமயம் உண் டென்றுகொண் டாடிய வீணருக்கே. 63

## பக்தி பெருக

வீணே பலிகவர் தெய்வங்கள் பாற்சென்று மிக்க அன்பு
பூணேன் உனக்(கு)அன்புபூண்டுகொண்டேன்நின்புகழ்ச்சியன்றிப்
பேணேன் ஒருபொழு தும்திரு மேனிப்ர காசமன்றிக்
காணேன் இருநில மும்திசை நான்கும் ககனமுமே. 64

## புத்திர பாக்கியம் உண்டாக

ககனமும் வானும் புவனமும் காணவிற் காமன் அங்கம்
தகனமுன் செய்த தவப்பெரு மாற்குத் தடக்கையும்செம்
முகனுமுந் நான்கிரு மூன்றெனத் தோன்றிய மூதறிவின்
மகனுமுண் டாயதன் றோவல்லி நீசெய்த வல்லபமே. 65

## கவிபாடும் ஆற்றல் பெற

வல்லபம் ஒன்றறி யேன்சிறி யேன்நின் மலரடிசெம்
பல்லவம் அல்லது பற்றொன்றி லேன்பசும் பொற்பொருப்பு
வில்லவர் தம்முடன் வீற்றிருப்பாய்வினை யேன்தொடுத்த
சொல்அவ மாயினும் நின்திரு நாமங்கள் தோத்திரமே. 66

## பகைவர்கள் அழிய

தோத்திரம் செய்து தொழுமின் போலுநின் தோற்றம்ஒரு
மாத்திரைப் போதும் மனத்தில்வை யாதவர் வண்மைக்குலம்
கோத்திரம் கல்வி குணம்குன்றி நாளும் குடில்கள்தொறும்
பாத்திரம் கொண்டு பலிக்குழ லாநிற்பர் பாரெங்குமே. 67

## நிலம், வீடு போன்ற செல்வங்கள் பெருக

பாரும் புனலும் கனலும் வெங் காலும் படர்விசும்பும்
ஊரும் முருகு சுவைஒளி யூறொலி ஒன்றுபடச்
சேரும் தலைவி சிவகாம சுந்தரி சீரடிக்கே
சாரும் தவமுடை யார்படை யாத தனமில்லையே. 68

## சகல சௌபாக்கியங்களும் உண்டாக

தனந்தரும் கல்வி தரும்ஒரு நாளும் தளர்வரியா
மனந்தரும் தெய்வ வடிவுந் தரும்நெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லன எல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாள் அபிராமி கடைக்கண்களே. 69

## இசை,ஓவியம் முதலிய கலைகளில் சித்திபெற

கண்களிக் கும்படி கண்டுகொண் டேன்கடம் பாடவியில்
பண்களிக் கும்குரல் வீணையும் கையும் பயோதரமும்.
மண்களிக் கும்பச்சை வண்ணமும் ஆகி மதங்கர்குலப்
பெண்களிற் றோன்றிய எம்பெரு மாட்டிதன் பேரழகே. 70

## மனக்குறை தீர்ந்து மகிழ்ச்சி பெருக

அழகுக்(கு) ஒருவரும் ஒவ்வாத வல்லி அருமறைகள்
பழகிச் சிவந்த பதாம்புயத் தாள்பனி மாமதியின்
குழவித் திருமுடிக் கோமள யாமளைக் கொம்பிருக்க
இழவுற்று நின்ற நெஞ் சேயிரங் கேல்உனக்(கு) என்குறையே. 71

## பிறவிப்பிணி தீர

என்குறை தீரநின்(று) ஏத்துகின் றேன்இனி யான்பிறக்கின்
நின்குறை யேஅன்றி யார்குறை காண்இரு நீள்விசும்பின்
மின்குறை காட்டி மெலிகின்ற நேரிடை மெல்லியலாய்
தன்குறை தீரஎங் கோன்சடை மேல்வைத்த தாமரையே. 72

## பெண்களுக்கு கர்பம் உண்டாக

தாமம் கடம்பு படைபஞ்ச பாணம் தனுக்கரும்பு
யாமம் வயிரவர் ஏத்தும் பொழு(து) எமக் கென்றுவைத்த
சேமம் திருவடி செங்கைகள் நான்(கு) ஒளி செம்மையம்மை
நாமம் திரிபுரை ஒன்றோ டிரண்டு நயனங்களே. 73

## செய்தொழிலில் தலமை எய்த

நயனங்கள் மூன்றுடை நாதனும் வேதமும் நாரணனும்
அயனும் பரவும் அபிராம வல்லி அடியிணையைப்
பயன்என்று கொண்டவர் பாவையர் ஆடவும் பாடவும்பொன்
சயனம் பொருத்து தமனியக் காவினில் தங்குவரே. 74

## வலிமை மிக்க விதியையும் வெல்ல

தங்குவர் கற்பகத் தருவின் நீழலில் தாயரின்றி
மங்குவர் மண்ணில் வழுவாப் பிறவியை மால்வரையும்
பொங்குவர் ஆழியும் ஈரேழ் புவனமும் பூத்தஉந்திக்
கொங்கிவர் பூங்குழ லாள்திரு மேனி குறித்தவரே. 75

## தனக்குரிய பொருள் தப்பாமல் வந்துசேர

குறித்தேன் மனத்தில்நின் கோலம்எல் லாம்நின் குறிப்பறிந்து
மறித்தேன் மறலி வருகின்ற நேர்வழி வண்டுகிண்டி
வெறித்தேன் அவிழ்கொன்றை வேணிப் பிரான்ஒரு கூற்றைமெய்யில்
பறித்தே குடிபுகு தும்பஞ்ச பாணி பயிரவியே. 76

## பகைவர்களால் உண்டாகும் அச்சம் நீங்க

பயிரவி பஞ்சமி பாசாங் குசைபஞ்ச பாணிவஞ்சர்
உயிரவி உண்ணும் உயர்சண்டி காளி ஒளிரும்கலா
வயிரவி மண்டலி மாலினி சூலி வராகிஎன்றே
செயிரவி நான்மறை சேர்திரு நாமங்கள் செப்புவரே. 77

## சகலபோக சௌபாக்கியங்கள் உண்டாக

செப்பும் கனக கலசமும் போலும் திருமுலைமேல்
அப்பும் களப அபிராம வல்லி அணிதரளக்
கொப்பும் வயிரக் குழையும் விழியின் கொழுங்கடையும்
துப்பும் நிலவும் எழுதிவைத் தேன்என் துணைவிழிக்கே. 78

## பந்தம் அறுக்க

விழிக்கே அருளுண்(டு) அபிராம வல்லிக்கு வேதம்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுண்(டு)எமக்(கு)அவ் வழிகிடக்கப்
பழிக்கே சுழன்றுவெம் பாவங்க ளேசெய்து பாழ்நரகக்
குழிக்கே அழுந்தும் கயவர்தம் மோடென்ன கூட்டினியே. 79

## நிலையான மனமகிழ்ச்சி உண்டாக

கூட்டிய வாஎன்னை தன்னடி யாரில் கொடியவினை
ஒட்டிய வாஎன்கண் ஒடிய வாதன்னை உள்ளவண்ணம்
காட்டிய வாகண்ட கண்ணும் மனமும் களிக்கின்றவா
ஆட்டிய வாநடம் ஆடகத் தாமரை ஆரணங்கே. 80

## நன்னடத்தை உண்டாக

அணங்கே அணங்குகள் நின்பரி வாரங்கள் ஆகையினால்
வணங்கேன் ஒருவரை வாழ்த்துகி லேன்நெஞ்சில்வஞ்சகரொ(டு)
இணங்கேன் என(து) உன(து) என்றிருப் பார்சில்ர்யாவரொடும்
பிணங்கனேன் அறிவொன் றிலேன்என்கண் நீவைத்தபேரளயே. 81

## கவனசக்தி பெருக

அளியார் கமலத்தில் ஆரணங் கேஅகி லாண்டமும்நின
ஒளியாக நின்ற ஒளிர்திரு மேனியை உள்ளுதொறும்
களியாகி அந்தக் கரணங்கள் விம்மிக் கரைபுரண்டு
வெளியாய் விடின்எங்ங னேமறப் பேன்நின் விரகினையே. 82

## ஏவலர் பலர் உளராக

விரவும் புதுமலர் இட்டுநின் பாத விரைக்கமலம்
இரவும் பகலும் இறைஞ்சவல் லார்இமை யோர்எவரும்
பரவும் பதமும் அயிராவதமும் பகீரதியும்
உரவும் குலிசமும் கற்பகக் காவும் உடையவரே.

## இக்கட்டான நிலைகள் நீங்க

உடையாளை ஒல்குசெம்பட்டு உடையாளை ஒளிர்மதிசெஞ்
சடையாளை வஞ்சகர் நெஞ்சடையாளைத் தயங்குநுண்ணூல்
இடையாளைஎங்கள்பெம் மானிடை யாளை இங்(கு)என்னைஇனிப்
படையாளை உங்களையும்படை யாவண்ணம் பார்த்திருமே. 84

## அல்லல் எல்லாம் அற

பார்க்கும் திசைதோறும் பாசாங் குசமும் பனிச்சிறைவண்(டு)
ஆர்க்கும் புதுமலர்ஐந்தும் கரும்பும்என் அல்லல் எல்லாம்
தீர்க்கும் திரிபுரை யாள்திரு மேனியும் சிற்றிடையும்
வார்க்குங் குமமுலை யும்முலை மேல்முத்து மாலையுமே. 85

## ஆயுதங்களால் உண்டாகும் அச்சம் நீங்க

மாலையன் தேட மறைதேட வானவர் தேடநின்ற
காலையும் சூடகக் கையையும் கொண்டு கதித்தகப்பு
வேலைவெங் காலன்என்மேல் விடும்போது வெளிநில்கண்டாய்
பாலையும் தேனையும் பாகையும் போலும் பனிமொழியே. 86

## செயற்கரிய செயல்களைச்செய்து புகழ்பெற

மொழிக்கும் நினைவுக்கும் எட்டாத நின்திரு மூர்த்திஎன்றன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்ற தால்விழி யால்மதனை
அழிக்கும் தலைவர் அழியா விரதத்தை அண்டமெல்லாம்
பழிக்கும் படியொரு பாகம் கொண்டாளும் பராபரையே. 87

## அம்பிகையின் அருள் எப்போதும் கிடைக்க

பரமென்று உனையடைந் தேன்தமி யேனும்உன் பத்தருக்குள்
தரமென்று இவன்என்று தள்ளத் தகாது தரியலர்தம்
புரம் அன்று எரியப்பொருப்புவில் வாங்கிய போதில் அயன்
சிரம்ஒன்று செற்றகை யான்இடப் பாகம் சிறந்தவளே. 88

## யோகசித்தி பெற

சிறக்கும் கமலத் திருவேநின் சேவடி சென்னிவைக்கத்
துறக்கம் தரும்நின் துணைவரும் நீயுந் துரியும் அற்ற
உறக்கம் தரவந்(து) உடம்போ(டு) உயிர்உற வற்றறிவு
மறக்கும் பொழுதென்முன் னேவரல் வேண்டும் வருந்தியுமே. 89

## பிரிந்த தம்பதிகள் மனம் ஒன்றி மகிழ்ந்து கூட

வருந்தா வகைஎன் மனத்தா மரையினில் வந்துபுகுந்(து)
இருந்தாள் பழைய இருப்பிட மாக இனிஎனக்குப்
பொருந்தா தொருபொருள் இல்லைவிண் மேவும் புலவருக்கு
விருந்தாக வேலை மருந்தா னதைநல்கும் மெல்லியலே. 90

## அரசாங்கக் காரியங்களில் வெற்றி உண்டாக

மெல்லிய நுண்ணிடை மின்அனை யாளை விரிசடையோன்
புல்லிய மென்முலை பொன்அனை யாளைப் புகழ்ந்துமறை
சொல்லிய வண்ணம் தொழும்அடி யாரைத் தொழுமவர்க்குப்
பல்லியம் ஆர்த்தெழ வெண்பக(டு) ஊரும் பதம்தருமே. 91

## மனப்பக்குவம் உண்டாக

பதத்தே உருகிநின் பாதத்தி லேமனம் பற்றிஉன்றன்
இதத்தே ஒழுக அடிமைகொண் டாய்இனி யான்ஒருவர்
மதத்தே மதிமயங் கேன்அவர் போன வழியும்செல்லேன்
முதத்தேவர் மூவரும் யாவரும் போற்றும் முகிழ்நகையே. 92

## உள்ளத்தே உண்மை ஒளி உண்டாக

நகையே இஃதிந்த ஞாலமெல் லாம்பெற்ற நாயகிக்கு
முகையே முகிழ்முலை மானே முதுகண் முடிவில் அந்த
வகையே பிறவியும் வம்பே மலைமகள் என்பதுநாம்
மிகையே இவள்தன் தகைமையை நாடி விரும்புவதே. 93

## பைத்தியம் தெளிய

விரும்பித் தொழும்அடி யார்விழி நீர்மல்கி மெய்புளகம்
அரும்பித் ததும்பிய ஆனந்த மாகி அறிவிழந்து
கரும்பிற் களித்து மொழிதடு மாறிமுன் சொன்னஎல்லாம்
தரும்பித்தர் ஆவரென் றால்அபி ராமி சமயம்நன்றே. 94

## அனைத்தையும் துறக்கும் மனநிலை பெற

நன்றே வருகினும் தீதே விளைகினும் நான் அறிவ(து)
ஒன்றேயு மில்லை உனக்கே பரம்எனக்(கு) உள்ளஎல்லாம்
அன்றே உனதென்(று) அளித்துவிட் டேன் அழி யாதகுணக்
குன்றே அருட்கட லேஇம வான்பெற்ற கோமளமே. 95

## எங்கும் தலைமையும் புகழும் பெற

கோமள வல்லியை அல்லியந் தாமரைக் கோயில்வைகும்
யாமள வல்லியை ஏதம்இலாளை எழுதரிய
சாமள மேனிச்சகலக லாமயில் தன்னைத்தம்மால்
ஆமள வும்தொழு வார்எழு பாருக்கும் ஆதிபரே. 96

## புகழும் தர்மமும் வளர

ஆதித்தன் அம்புலி அங்கி குபேரன் அமரர்தங்கோன்
போதிற் பிரமன் புராரி முராரி பொதியமுனி
காதிப் பெருபடைக் கந்தன் கணபதி காமன்முதல்
சாதித்த புண்ணியர் எண்ணிலர் போற்றுவர் தையலையே. 97

## வஞ்சகர் செயலால் வருத்தம் உண்டாகாதிருக்க

தைவந்து நின்னடித் தாமரை சூடிய சங்கரற்குக்
கைவந்த தீயும் தலைவந்த ஆறும் கரந்ததெங்கே
மெய்வந்த நெஞ்சின் அல் லால்ஒரு காலும் விரகர்தங்கள்
பொய்வந்த நெஞ்சில் புகஅறி யாமடப் பூங்குயிலே. 98

## அருள் தன்மை வளர

குயிலாய் இருக்கும் கடம்பா டவியிடைக் கோலஇயல்
மயிலாய் இருக்கும் இமயா சலத்திடை வந்துதித்த
வெயிலாய்இருக்கும் விசும்பில் கமலத்தின் மீதன்னமாம்
கயிலா யருக்(கு) அன்(று) இமவான் அளித்த கனங்குழையே. 99

## அம்பிகையின் திருவுருவை மனத்தில் எப்போதும் காண

குழையைத் தழுவிய கொன்றையந் தார்கமழ் கொங்கைவல்லி
கழையைப் பொருத திருநெடுந் தோளும் கரும்புவில்லும்
விழையப் பொருதிறல் வேரியம் பாணமும் வெண்ணகையும்
உழையைப் பொருகண்ணும் நெஞ்சில்எப் போதும் உதிக்கின்றவே. 100

## நூற்பயன்

ஆத்தாளை எங்கள் அபிராம வல்லியை அண்டம்எல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத் தாளைப் புவி அடங்கக்
காத்தாளை அங்குச பாசம் குசுமம் கரும்பும் அங்கை
சேர்த்தாளை முக்கண்ணி யைத்தொழு வார்க்(கு) ஒரு தீங்கில்லையே.

இக்கோவிலில் சஷ்டியப்த பூர்த்தி மேலும் சதாபிஷேகம்
செய்வதற்கு சாலச் சிறந்தது என்று கருதப்படுகிறது.

# 10. இராகுகால துர்க்கா அஷ்டகம்

*அருளியவர் : ஸ்ரீ துர்க்கைச் சித்தர்*

அன்னை மகாசக்தியின் அற்புத வடிவங்களில் உயர்ந்த வடிவே ஸ்ரீ துர்க்கை. நன்மைகள் தந்து, தீமைகளை அழித்து அன்பர்களைக் காப்பாற்றும் ஸ்ரீ துர்ககை, ஆகமவிதிப்படி சிவாலயங்களில் இடப்புற வெளிச்சுவரில் பிரதிஷ்டை செய்யப்பட்டு பக்தர்களுக்குத் தரிசனம் தருவது ஐதீகம். ஸ்ரீ துர்க்கை அம்மனை, ராகுகாலத்தில் பூஜைசெய்து வழிபடுவது சகல நன்மைகளையும் தரும். ராகுவும் மற்றும் கேதுவும் ஒவ்வொரு கிழமையிலும் அந்தக் கிழமைக்குரிய கிரகத்தைப் பிடிக்கின்ற காலத்தைத்தான் தினமும் ராகுகாலம் மற்றும் எமகண்டம் எனக் கடைப்பிடிக்கின்றோம். சக்தி வாய்ந்த ராகுவே, மகா சக்தியான துர்க்கையை வழிபட்டு பலன் அடைந்துள்ளதாக நமது புராணங்கள் கூறுகின்றன. எனவே தினமும் ராகுகால நேரத்தில் துர்க்கையை வழிபடுவது சிறந்தது.

வாரத்தின் மற்ற நாட்களைக் காட்டிலும் மங்களவாரமான செவ்வாய்க்கிழமை ராகுகால நேரத்தில் துர்க்கையை வழிபடுவது சாலச்சிறந்தது. காரணம், அங்காரகன் துர்க்கையை வழிபட்டு நற்பலன் பெற்றதுதான். ,மங்களவாரம் ராகுகால நேரத்தில் கோவிலுக்குச் சென்று, துர்க்கா தேவியை வழிபட வேண்டும். நல்ல தரமுள்ள, மஞ்சள் நிறம் கொண்ட எலுமிச்சைப் பழத்தைக் கொண்டு சென்று, இரண்டாகத் துண்டு செய்து, சாற்றைத் தனியாக எடுத்து வைத்துவிட்டு, இரு எலுமிச்சைத் துண்டுகளையும் உள்வெளியாகத் திருப்பி, அவற்றைத் திருவிளக்காகப் பயன்படுத்துதல் வேண்டும். சுத்தமான நல்லெண்ணெய், தேங்காய் எண்ணெய் அல்லது நெய் ஊற்றி, திரியிட்டு துர்க்கை அம்மன் சன்னிதியில் ஏற்றி வைத்து வணங்க வேண்டும். பூஜைக்கு மஞ்சள் நிறப் பூக்களான சாமந்தி, நந்தியாவட்டை ஆகியவைகளையும், மஞ்சள் வாழைப்பழம் அல்லது மாம்பழம் ஆகிய பழங்களையும் பயன்படுத்ததுதல் உசிதம். எலுமிச்சை சாதம், வடை, பாயசம் ஆகியவற்றை நிவேதனமாகப் பயன்படுத்துதல் சிறந்தது. எலுமிச்சைச் சாற்றினைப் பானமாக்கி நிவேதனம் செய்து பக்தருக்கு வழங்குதல் நலம். அவரவர் வசதிக்கேற்ப நைவேத்யம் செய்யலாம்.

புராணங்களால் போற்றப்படும் துர்க்கா தேவியை தருமபுத்திரர் பூஜித்துத் தன் தவறுகளுக்குப் பரிகாரம் செய்தார் எனவும், துர்க்கா தேவியை வணங்கினால் எதிரிகளை வென்று ஜெயமடையலாம் என ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா அர்ஜுனனுக்குக் கூற அவரும் அவ்வாறே வணங்கி அன்னையின் அருளால் வெற்றிபெற்றதாகவும் மகாபாரதம் கூறுகிறது.

மங்கள வாரம் துர்க்காதேவியைப் பூஜிக்கும்போது "ராகுகால துர்க்கா அஷ்டகத்தை" மனமுருகப் பாடி வழிபட்டு, உளமார வேண்டும் பக்தர்களுக்கு அன்னையின் அருள் பரிபூரணமாகக் கிட்டும் என்பதில் ஐயமில்லை.

இப்படி சர்வ வல்லமை பொருந்திய துர்க்கா தேவியை வழிபடும் கன்னியர்கள் விவாகப் பிராப்தி பெற்று நல்ல கணவனையும், சுமங்கலிகள் சகல ஐஸ்வரியங்களையும் பெற்று இன்பவாழ்வினை அடைவார்கள் என்பது திண்ணம்.

(ஹரிவராஸனம் மெட்டு)

(தேவி துர்க்கையே என்ற நாமம்
வரும்போது நமஸ்காரம் செய்வது நல்லது)

*வாழ்வு ஆனவள் துர்க்கா வாக்கு மானவள்*
*வானில் நின்றவள் இந்த மண்ணில் வந்தனள்*
*தாழ்வு அற்றவள் துர்க்கா தாயும் ஆனவள்*
*தாபம் நீக்கியே என்னைத் தாங்கும் துர்க்கையே*
*தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே*
*தேவிதுர்க்கையே ஜெய தேவி துர்க்கையே* 1

*உலகை யீன்றவள் துர்க்கா உமையு மானவள்*
*உண்மையானவள் எந்தன் உயிரைக் காப்பவள்*
*நிலவில் நின்றவள் துர்க்கா நித்யை யானவள்*
*நிலவி நின்றவள் எந்தன் நிதியும் துர்க்கையே*
*தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே.*
*தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே.* 2

செம்மை யானவள் துர்க்கா செபமு மானவள்
அம்மை யானவள் அன்புத் தந்தை யானவள்
இம்மை யானவள் துர்க்கா இன்ப மானவள்
மும்மை யானவள் என்றும் முழுமை துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே. 3

உயிரு மானவள் துர்க்கா உடலு மானவள்
உலக மானவள் எந்தன் உடைமை யானவள்
பயிரு மானவள் துர்க்கா படரும் கொம்பவள்
பண்பு பொங்கிட என்னுள் பழுத்த துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே 4

துன்ப மற்றவள் துர்க்கா துரிய வாழ்பவள்
துறையு மானவள் அன்புத் தோணி யானவள்
அன்பு உற்றவள் துர்க்கா அபய வீடவள்
நன்மை தங்கிட என்னுள் நடக்கும் துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே. 5

குருவு மானவள் துர்க்கா குழந்தை யானவள்
குலமு மானவள் எங்கள் குடும்ப தீபமே
திருவு மானவள் துர்க்கா திருசூலி மாயவள்
திரு நீற்றில் என்னிடம் திகழும் துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே. 6

ராகு தேவனின் பெரும் பூஜை ஏற்றவள்
ராகு நேரத்தில் என்னைத் தேடி வருபவள்
ராகு காலத்தில் எந்தன் தாயே வேண்டினேன்
ராகு துர்க்கையே என்னைக் காக்கும் துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே. 7

*கன்னி துர்க்கையே இதயக் கமல துர்க்கையே*
*கருணை துர்க்கையே வீரக் ககன துர்க்கையே*
*அன்னை துர்க்கையே என்றும் அருளும் துர்க்கையே*
*அன்பு துர்க்கையே ஜெய துர்க்கை துர்க்கையே*
*தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே*
*தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே. 8*

## 11. ஸ்ரீ காமாட்சி அம்மன் துக்க நிவாரண அஷ்டகம்

***அருளியவர் : ஸ்ரீ துர்க்கைச் சித்தர்***

**அன்னை ஸ்ரீ பரமேஸ்வரி பல வடிவங்களில் காட்சி தந்து, தன்னை உள்ளன்போடு வழிபடும் பக்தர்களுக்கு என்றென்றும் அருள்பாலித்து வருகிறார். தன் பக்தர்களின் தேவையறிந்து வரமருளும் தேவியின் வடிவங்கள் பலவாகும். மங்கள ரூபிணியாகிய அன்னை பராசக்தி; சங்கரி,கிருபாகரி, சக்தி, சாமுண்டீஸ்வரி, காளி,துர்க்கா, காமாட்சி என பல வடிவில் தோன்றி காட்சி தருகிறார்.**

**எல்லாம் வல்ல அன்னை பராசக்தியைப் பணிந்து, பூஜித்து வேண்டுவோர் அனைத்து நலன்களையும் பெறுவர். தேவியின் அருள்பெற, உளமார 'துக்க நிவாரண அஷ்டக'த்தைப் பாடி, வேண்டித் துதிக்கும் அனைவரும் அன்னையின் பூரண அருளைப் பெறுவர் என்பது திண்ணம்.**

**(அயிகிரி நந்தினி மெட்டு)**

*மங்கள ரூபிணி மதியணி சூலினி மன்மத பாணியளே*
*சங்கடம் நீக்கிடச் சடுதியில் வந்திடும் சங்கரி சௌந்தரியே*
*கங்கண பாணியின் கனிமுகங் கண்டநல் கற்பகக் காமினியே*
*ஜெயஜெய சங்கரி கௌரி க்ருபாகரி துக்கநிவாரணி காமாட்சி 1*

*கானுறு மலரெனக் கதிர் ஒளிகாட்டிக் காத்திட வந்திடுவாள்*
*தானுறு தவஒளி தாரொளிமதியொளி தாங்கியே வீசிடுவாள்*
*மானுறு விழியாள் மாதவன் மொழியாள் மாலைகள் சூடிடுவாள்*
*ஜெயஜெய சங்கரி கௌரி க்ருபாகரி துக்கநிவாரணி காமாட்சி 2*

சங்கரி சௌந்தரி சதுர்முகன் போற்றிடச் சபையினில் வந்தவளே
பொங்கரி மாவினில் பொன்னடி வைத்துப் பொருந்திடவந்தவளே
எங்குலந் தழைக்க எழில்வடி வுடனே எழுந்தநல் துர்க்கையளே
ஜெயஜெய சங்கரி கௌரி க்ருபாகரி துக்கநிவாரணி காமாட்சி 3

பணபண பம்பணக் பறையொலி கூவிடப் பண்மணி நீவருவாய்
தணதண தந்தன தவிலொலி முழங்கிடத் தண்மணி நீவருவாய
கணகண கங்கண கதிர் ஒளிவீசிடக் கண்மணி நீவருவாய்
ஜெயஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்கநிவாரணி காமாட்சி 4

பஞ்சமி பைரவி பர்வதபுத்திரி பஞ்சநல் பாணியளே
கொஞ்சிடும் குமரனைக் குணமிகு வேலனைக் கொடுத்த
நல்குமரியளே
சங்கடம் தீர்த்திடச் சமரதுசெய்தநல் சக்தியெனும் மாயே
ஜெயஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்க நிவாரணி காமாட்சி 5

எண்ணியபடிநீ யருளிட வருவாய் எங்குல தேவியளே
பண்ணியசெயலின் பலனது நலமாய்ப் பல்கிட அருளிடுவாய்
கண்ணொளி யதனால் கருணையே காட்டிக் கவலைகள்
தீர்ப்பவளே
ஜெயஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்கநிவாரணி காமாட்சி 6

இடர்தரு தொல்லை இனிமேல் இல்லையென்றுநீ சொல்லிடுவாய்
சுடர்தரு அமுதே சுருதிகள் கூறிச் சுகமதைத் தந்திடுவாய்
படர்தரு இருளில் பரிதியாய் வந்து பழவினை ஓட்டிடுவாய்
ஜெயஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்கநிவாரணி காமாட்சி 7

ஜெயஜெய பாலா சாமுண்டேஸ்வரி ஜெயஜெய ஸ்ரீதேவி
ஜெயஜெய துர்க்கா ஸ்ரீபரமேஸ்வரி ஜெயஜெய ஸ்ரீதேவி
ஜெயஜெய ஜெயந்தி மங்களகாளி ஜெயஜெய ஸ்ரீதேவி
ஜெயஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்கநிவாரணி காமாட்சி 8

# 12. ஸ்ரீ லலிதா நவரத்தின மாலை

*(அகஸ்தியர் பாடல்)*

அன்னை ஜெகன் மாதாவின் வடிவமாகிய ஸ்ரீ லலிதாம்பிகை தன்னை மனத்தால் நினைப்பவர்களுக்கே அற்புத வளங்கள் அளிக்கும் தெய்வம். ஒவ்வொரு நாளும், மாலைநேரம் பூஜையின் போது விளக்கேற்றி அன்னை லலிதாம்பிகையை சிந்தையில் நினைந்து 'லலிதா நவரத்ன மாலையை'ப் பாராயணம் செய்யும் பக்தர்கள் எல்லா வளமும் பெறுவர்.

அகஸ்தியரால், அன்னை லலிதாம்பிகையின் மீது பாடப்பெற்ற பாடல்களின் தமிழ்வடிவான லலிதா நவரத்தின மாலையின் ஒன்பது பாடல்களும் நவரத்தினங்களின் பெயரால் விளங்குகின்றன. நவரத்தினங்களையும் மாலையாக்கினால் எப்படி அந்த மாலை ஒளிவிட்டுப் பிரகாசிக்குமோ அப்படி இந்த லலிதா நவரத்தின மாலையைப் பாராயணம் செய்பவர்கள் வாழ்வும் ஒளி மிகுந்ததாக அமையும்.

நவரத்தின மாலை எப்படி ஒருவரின் புறநிலையின் உயர்வைக் காட்டுவதாக அமையுமோ அவ்வாறே லலிதா நவரத்தின மாலையைப் பாராயணம் செய்வோரின் அகநிலையும் உயர்ந்து விளங்கும் என்பது உறுதி.

## காப்பு

*ஆக்கும் தொழில் ஐங்கரனாற்றநலம்*
*பூக்கும் நகையாள் புவனேச்வரிபால்*
*சேர்க்கும் நவரத்தின மாலையினைக்*
*காக்கும் கணநாயக வாரணமே*

*மாதா ஜெயஓம் லலிதாம்பிகையே*
*மாதா ஜெயஓம் லலிதாம்பிகையே*
*மாதா ஜெயஓம் லலிதாம்பிகையே*
*மாதா ஜெயஓம் லலிதாம்பிகயே*

## வைரம்

கற்றும் தெறியார் காடே கதியாய்
கண்மூடி நெடுங்கன வானதவம்
பெற்றும் தெரியார் நிலையென்னில் அவம்
பெருகும் பிழையேன் பேசத்தகுமோ
பற்றும் வயிரப் படைவாள் வயிரப்
பகைவர்க் கெமனாக எடுத்தவளே
வற்றாத அருட்சுனையே வருவாய்
மாதா ஜெயஓம் லலிதாம்பிகையே (மாதா) 1

## நீலம்

மூலக் கனலே சரணம் சரணம்
முடியா முதலே சரணம் சரணம்
கோலக் கிளியே சரணம் சரணம்
குன்றாத ஒளிக் குவையே சரணம்
நீலத் திரு மேனியிலே நினைவாம்
நினை வற்றெளியேன் நின்றேன் அருள்வாய்
வாலைக் குமரி வருவாய் வருவாய்
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே (மாதா)

## முத்து

முத்தேவரும் முத்தொழி லாற்றிடவே
முன்நின் றருளும் முதல்வீ சரணம்
வித்தே விளைவே சரணம் சரணம்
வேதாந்த நிவாசினியே சரணம்
தத்தேறியே நான் தனையன் தாய்நீ
சாகாத வரம் தரவே வருவாய்
மத்தேறாத்திக் கினை வாழ் வடையேன்
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே (மாதா) 3

## பவளம்

அந்தி மயங்கிய வான விதானம்
அன்னை நடம்செயும் ஆனந்த மேடை
சிந்தை நிரம்ப வளம் பொழிபாரோ
தேம்பொழிலா மிது செய்தவளாரோ
எந்தை இடத்தும் மனத்தும் இருப்பாள்
எண்ணுபவர்க் கருள் எண்ண மிகுந்தாள்
மந்திர வேத மயப் பொருளானாள்
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே (மாதா) 4

## மாணிக்கம்

காணக் கிடையாக் கதியானவளே
கருதக் கிடையாக் கலையானவளே
பூணக் கிடையாப் பொலிவானவளே
புனையக் கிடையாப் புதுமைத்தவளே
நாணித் திருநாமமும் நின் துதியும்
நவிலாத வரை நாடாதவளே
மாணிக்க ஒளிக் கதிரே வருவாய்
மாதா ஜெயஓம் லலிதாம்பிகையே (மாதா) 5

## மரகதம்

மரகத வடிவே சரணம் சரணம்
மதுரித பதமே சரணம் சரணம்
சுரபதி பணியத் திகழ்வாய் சரணம்
சுதி ஜதி லயமே இசையே சரணம்
அரஹர சிவ என்றடியார் குழும
அவரருள் பெற அருளமுதே சரணம்
வரநவ நிதியே சரணம் சரணம்
மாதா ஜெயஓம் லலிதாம்பிகையே (மாதா) 6

## கோமேதகம்

பூமேவிய நான் புரியும் செயல்கள்
பொன்றாது பயன் குன்றா வரமும்
தீமேல் எனினும் ஜெயசக்தி எனத்
திடமாய் அடியேன் மொழியும் திறனும்
கோமேதகமே குளிர்வான் நிலவே
குழல் வாய்மொழியே தருவாய் தருவாய்
மாமேருவிலே வளர் கோகிலமே
மாதா ஜெயஓம் லலிதாம்பிகையே (மாதா) 7

## பதுமராகம்

ரஞ்சனி நந்தினி அங்கணி பதும
ராக விகாச வியாபினி அம்பா
சஞ்சல ரோகநிவாரணி வாணி
சாம்பவி சந்திர கலாதரி ராணி
அஞ்சன மேனி அலங்க்ருத பூரணி
அம்ருத சொருபிணி நித்ய கல்யாணி
மஞ்சுள மேரு சிருங்க நிவாசினி
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே (மாதா) 8

## வைடூரியம்

வலையொத்தவினை கலையொத்த மனம்
மருளப் பறையாறொலியொத்த விதால்
நிலையற்றெளியேன் முடியத் தகுமோ
நிகளம் துகளாக வரம் தருவாய்
அலையற் றசைவற் றநுபூதி பெறும்
அடியார் முடிவாழ் வைடூரியமே
மலையத்துவசன் மகளே வருவாய்
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே (மாதா) 9

## பயன்

எவர் எத்தினமும் இசைவாய் லலிதா
நவரத்தின மாலை நவின் றிடுவார்
அவர் அற்புத சக்தியெலாம் அடைவார்
சிவ ரத்தினமாய் திகழ்வா ரவரே (மாதா)

## 13. ஸ்ரீ துளசி மகாத்மியம்

முன்னொரு காலத்தில் சங்கசூடன் என்ற அசுரன் வாழ்ந்துவந்தான். பல வரங்கள் பெற்று அதனால் பல அக்கிரமங்களைச் செய்தான். அவனது கடுந்தவத்தின் பலனாக ஸ்ரீகிருஷ்ண கவசம்அணிந்திருந்தான். அவனது மனைவி துளசி கற்புக்கரசியாகத் திகழ்ந்தாள். சங்க சூடனின் கொடுமைகளைத் தாங்காமல் தேவர்கள் மும்மூர்த்திகளிடமும் முறையிட்டனர். அவர்களும் சங்கசூடனை வதம் செய்ய பெரும் போரிட்டனர். ஆனால் அவனை வெல்ல இயலவில்லை. துளசியின் கற்பு எனும் கவசம் சங்கசூடனுக்கு பாதுகாவலாக அமைந்தது.

துளசியின் மகிமையை உணர்ந்த பரந்தாமன் துளசியைத் தோத்தரித்தார். பரந்தாமனின் வேண்டுதலால் உளம் மகிழ்ந்த துளசிஅவரை வணங்கினாள். அவள் வேண்டிய வரங்களை அளிப்பதாக நாராயணன் கூற, மீண்டும் பிறவி இல்லாத நிலை வேண்டும் எனவும், பிறந்தாலும் வைகுந்தனை மறவாத மனம் வேண்டும் எனவும் துளசி வேண்டிக் கொண்டாள். அவ்வாறே அளிப்பதாக பரந்தாமன் கூற, துளசி அவரது பாதத்தில் விழுந்து வணங்கி, உயிர் நீத்தாள். அவளது உடல் 'கண்டகி' எனும் நதியாகியது. அவளது கேசம், துளசிச் செடியாகியது. ஸ்ரீவிஷ்ணு அத்துளசியை மாலையாக அணிந்து கொண்டார். துளசியை இழந்த அசுரன் பரந்தாமனால் வதம் செய்யப்பட்டான்

ஸ்ரீதேவியின் அம்சமான துளசி மக்களின் பிணிதீர்க்கும் மருந்தாகும். துளசி இல்லாமல் பரந்தாமன் பூஜையேற்பதில்லை. 'திருத்துழாய்' என்ற பெயரில் பெருமானின் திருக்கோயில்களில் பூஜைப் பொருளாக விளங்கும் துளசியினால் நாராயணனைப் பூசித்தால் 1000 பாற்குட அபிஷேகம் செய்த பலன் ஏற்படும்.

துளசி இலையின் நுனியில் நான்முகனும், அடியில் சங்கரனும், மத்தியில் நாராயணனும் வசிப்பதாக ஐதீகம். துளசி இலையினால் சங்கரநாராயணனாக விளங்கும் ஸ்ரீமஹாதேவனையும் அர்ச்சிக்கலாம். இத்தகைய துளசியை வீடுகளில், மாடங்கள் அமைத்து பக்தி சிரத்தையுடன் பூஜிக்கும் கன்னிப் பெண்கள் நல்ல கணவரையும், சுமங்கலிப் பெண்கள் தீர்க்க சுமங்கலிகளாக விளங்கும் சகல சௌபாக்கியங்களையும் பெறுவார்கள். துளசி பூஜையின்போது பாராயணம் செய்வதற்குகந்த பாரம்பரியம் மிக்க துளசி தோத்திரம் இங்கு தரப்பட்டுள்ளது. அனைவரும் துளசி பூஜை செய்து ஸ்ரீமஹாவிஷ்ணுவின் அருளைப் பெறவேண்டுகிறோம்.

துளசியை பறிக்கும்போது தோத்திரம் சொல்லியபடியே பறிக்கலாம். பெண்கள் தலைகுளித்த அன்று அருகில் செல்வதோ, துளசி இலையை பறிப்பதோ கூடாது.

## துளசி தோத்திரம்

ஸ்ரீமத் துளசியம்மா, திருவே கல்யாணியம்மா !
வெள்ளிக்கிழமை தன்னில், விளங்குகின்ற மாதாவே,
செவ்வாய்க்கிழமை தன்னில் செழிக்கவந்த செந்திருவே,
தாயாரே, உன்றன் தாளிணையில் நான்பணிந்தேன்
பச்சைப் பசுமையுள்ள துளசி நமஸ்காரம்
பரிமளிக்கும் மூலக்கொழுந்தே நமஸ்காரம்
அற்பப் பிறப்பைத் தவிர்ப்பாய் நமஸ்காரம்
அஷ்ட ஐஸ்வர்யம் அளிப்பாய் நமஸ்காரம்
ஹரியின் தேவி அழகி நமஸ்காரம்
அடைந்தார்க்கு இன்பம் அளிப்பாய் நமஸ்காரம்
வனமாலை என்னும் மருவே நமஸ்காரம்
வைகுண்ட வாஸியுடன் மகிழ்வாய் நமஸ்காரம்
அன்புடனே நல்ல அருந்துளசி கொண்டுவந்து
மண்ணின் மேல்நட்டு மகிழந்துதினம் நீரூற்றி
முற்றத்தில் தான்வளர்த்து முத்துப்போல் கோலமிட்டுச்
செங்காவி சுற்றியிட்டுத் திருவிளக்கை ஏற்றிவைத்துப்
பழங்களுடன் தேங்காயும் தாம்பூலம் தட்டில் வைத்துப்
புஷ்பங்களைச் சொரிந்து பூஜித்த பேர்களுக்கு
என்ன பலனென்று இரிஷிகேசர் தான்கேட்க
மங்களமாய்த் துளசி மகிழ்ந்துரைப்பாள்
மங்களமாய் என்னை மகிழந்துதினம் பூஜிப்போர்
தீவினையைப் போக்கிச் சிறந்தபலன் நானளிப்பேன்
அரும்பிணியை நீக்கி அருட்செல்வம் நான் கொடுப்பேன்
புத்திர னில்லாதவர்க்குப் புத்திரநற் பேரளிப்பேன்
கன்னியர்கள் பூஜித்தால் நல்ல கணவருடன் சேர்த்து வைப்பேன்
இல்லறத்தார் பூஜைசெய்தால் இசையோடு வாழவைப்பேன்
முமுக்ஷீக்கள் பூஜைசெய்தால் மோட்சபதம் நான் கொடுப்பேன்
கோடிக் காராம் பசுவைக் கன்றுடனே கொண்டுவந்து
கொம்புக்குப் பொன்னமைத்துக் குளம்புக்கு வெள்ளிகட்டிக்
கங்கைக் கரைதனிலே கிரஹணநற் காலத்தில்
வாலுருவி அந்தணர்க்கு மாதானம் செய்தபலன்
நானளிப்பேன் சத்தியமென்று நாயகியும் சொல்லலுமே
அப்படியே ஆகுமென்று திருமால் அறிக்கையிட்டார்
இப்படியே துளசியினை ஏற்றித் தொழுவார்கள்
நல்லபடி எந்நாளும் நானித்தில் வாழ்ந்திடுவார்
நாயகியாம் துளசித்தாய் நயனஅருட் பொழிவாளே.

- சுபம் -

# 14. ஸ்ரீ கெருடபத்து

ஸ்ரீமந் நாராயணன் உலகையெல்லாம் காத்து இரட்சிக்கும் கடவுள். ஜீவராசிகள் அனைவரையும் காத்தருளும் பெரும் பூபாரத்தைத் தாங்கும் திருமாலாகிய பெருமாளையே சுமந்திடும் வாகனமாக அமையும் பாக்கியத்தைப் பெற்றவர். பட்சிராஜனாக விளங்கும் கருடனாவார்.

காசிப மகரிஷிக்கும், விநதைக்கும் பிறந்து, பெருமாளின் பக்தனாக விளங்கி அவரின் பூரண அருள்பெற்று தன் முதுகில் நாராயணனைச் சுமக்கும் பாக்கியம் பெற்று அதன் காரணமாக திருமாலின் பக்தர்களால் வணங்கப்பெறும் பெரும்பாக்கியம் பெற்று, பெரியத் திருவடி என்ற சிறப்பான உயர்ந்த பெயர் பெற்றவர். இதற்கு மேலும் சிறப்பாகக் கருடாழ்வார் என்ற மாபெரும் புகழுடையவர்.

ஒரு முறை ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைத் தொழுது, அவரிடம் உலகில் ஜீவர்களாகிய மனிதர்களின் பிறப்பு, இறப்பு ரகசியங்களையும், இறப்பின் பின் மனிதர்க்கு ஏற்படும் விளைவுகளையும் மற்றும் அதன்காரணங்களையும், என்ன புண்ணியம் செய்தால் மறுபிறவி நீங்கும் என்ற விவரங்களையும், பூமியில் மனிதர்கள் செய்யவேண்டிய கர்மானுஷ்டானங்களையும் விவரமாகக் கூறியருளுமாறு பறவைகளின் அரசனாகிய கருடன் வேண்டிக்கொள்ள பெருமாளே அனைத்து விவரங்களையும் பெரியதிருவடிக்கு கூறியருளினார். இவ்வாறு ஸ்ரீமந் நாராயணன், கருடாழ்வார்க்கு அருளிய விவரங்களே ஸ்ரீகருடபுராணம் என்று வழங்கப்படுகிறது.

இத்தகைய பெருமை பொருந்திய பெரிய திருவடியாகிய கருடாழ்வாரைப் பணிந்தாலே ஸ்ரீமந் நாராயணனைத் துதித்த பலன் ஏற்படும். எனவேதான் பெருமாளின் பிரம்மோற்சவ வைபவத்தில் ஒருநாள் கருட சேவையாகவே நடைபெறுவது தொன்றுதொட்டு வழக்கமாக உள்ளது. பெருமாள் அன்று கருடன் மீது எழுந்தருளும் வாசல் கருடவாசல் என்றும் வழங்கப்படுகிறது. இத்தகைய சிறப்பு வாய்ந்த கருடனை முதன்மைப்படுத்தி பெருமாளை வழிபடும் 'கெருடப் பத்து' எனும் பாரம்பரியப் பாடல்கள் இங்கு வழங்கப்பட்டுள்ளது. கெருடாழ்வார் மீது எழுந்தருளும் ஸ்ரீமந் நாராயணனின் அருளைமட்டுமின்றி, சிவபெருமானின் அருளையும் வேண்டும் அற்புதத்தையும் பக்தர்கள் கவனித்து, தமிழ்ச்சுவை அமைந்த இப்பாடல்களைப் பாராயணம் செய்து, திருமால் திருவருளைப் பெற வேண்டுகிறோம்.

## நூல்

ஓம் பூரணனே பதினாறு திங்கள் சேரும்
பொருந்தியே யருக்கன் பதினெட்டுஞ் சேரும்
வாரணனே கருமுகில்போல் மேனிசேரும்
கருணைபெரு மஷ்டாட்சரங் கலந்துவாழும்
வாரணனே லட்சுமியோ டெட்டுஞ்சேரும்
மதிமுகம் போல் நின்றிலங்கு மாயாநேயா
ஆரணனே ரகுராமா கெருடன் மீதில்
அன்புடனே ஏறிவந்தருள் செய்வாயே 1

மந்திரமோ அஷ்டசித்து மெட்டுஞ்சேரும்
வாழ்கிரக மொன்பதுமே வந்துசேரும்
கந்தருவர் கணநாத ராசிவர்க்கம்
கலைக்கியான நால்வேதங் கலந்துவாழும்
நந்திமுதல் தேவர்களுங் கவனயோகம்
நமஸ்கரித் துன்பாதம் நாளும்போற்ற
அந்தரமாய் நிறைந்திருக்குங் கெருடன்மீதில்
அன்புடனே ஏறிவந்தருள் செய்வாயே 2

மூலமுதலோ ரெழுத்து நீர்தானாகும்
மூன்றெழுத்து மைந்தெழுத்து மொழியலாமோ
சீலமுதல் ஓம்-அங்-உங்-மங்-றீங்கென்றே
சிவனுடைய திருநாமம் நீர்தானாகுங்
காலமுதல் ஓம்-அங்-உங்-மங்-றீங்கென்றே
கருணை பெருமிவ்வெழுத்து நீர்தானாகும்
ஆலவிஷங் கையேந்துங் கெருடன்மீதில்
அன்புடனே ஏறிவந்தருள் செய்வாயே 3

நவ்வென்றும் கிலியென்றும் ஓம்சிவாயமென்றும்
நமநம சிவசிவ ராராவென்றும்
சவ்வென்றும் ஓங்கார ரீங்காரமாகித்
தவமுடைய விவ்வெழுத்தும் நீர்தானாகும்
ஒவ்வென்றும் ஓம்நமோ நாராயணவென்று
உன்பாத முச்சரித்து கந்துபோற்ற
அவ்வென்று ரகுராமா கெருடன் மீதில்
அன்புடனே ஏறிவந்தருள் செய்வாயே 4

உதிக்கின்ற சிவசொரூப முனக்கேயாகும்
ஓம்அவ்வும் உவ்வுங் கிலியுமென்றே
பதிக்கிசைந்த ஐந்தெழுத்தை வெளியில்விட்டே
பச்சைமுகில் மேனியனே பணிந்தேனுன்னை
விதிக்கிசைந்த மெய்ப்பொருளே அரிகோவிந்தா
விளக்கொளிபோல் மெய்த்தவமே விரும்பித் தாதா
அதற்கிசைந்த நடம்புரியுங் கெருடன்மீதில்
அன்புடனே ஏறிவந்தருள் செய்வாயே 5

வேத முதலாயிருந்த சிங்கரூபம் விளங்குகின்ற
விரணியனை வதையே செய்தாய்
பூதமுதலாம் பிறவும் புண்ணிய நேயா
புகழ்ந்தவர்க்குத் துணைவருவாய் யசோதைபுத்ரா
நாதமுதல் விந்துவாய் உயிருக்கெல்லாம்
நயம்பெறவே நிறைந்திருக்கும் வாதபிரம
யாதவன்போல் நிறைந்திருக்கும் கெருடன்மீதில்
அன்புடனே ஏறிவந்தருள் செய்வாயே 6
முக்கோண நாற்கோண மொழிந்தைக் கோண
முச்சுடறே யறுகோண மென்கோணமாகும்
சட்கோண நாற்பத்துமூன்று கோணம்
தந்திரமுஞ் சிதம்பரமுஞ் சகலசித்தும்
இக்கோண மிதுமுதலாய் வகாரமட்டும்
இறைவனாய்த் தானிருந்து ரட்சித்தாளும்
அக்கோண மீதிருந்து கெருடன்மீதில்
அன்புடனே ஏறிவந்தருள் செய்வாயே 7
பச்சைமுகில் மேனியனே உனக்கு
இந்தப் பார்தனிலே பத்தவதாரமுண்டு
மச்சமென்றும் கூர்மமென்றும் வராகமென்றும்
வாமனென்றும் ராமனென்றும் பவுத்தனென்றும்
துஷ்டரை யடக்க மோகினி வேடங் கொண்டாய்த்
தோன்றினா யுன்சோரூபமெல்லாம் அறிவாருண்டோ
அச்சந்தீர்த் தெனையாளக் கெருடன் மீதில்
அன்புடனே ஏறிவந்தருள் செய்வாயே 8

வேதியனாய்த் தோன்றிவந்தாய் மாபலிக்கு
விண்ணவர்க்காய் நரசிங்க ரூபமானாய்ச்
சாதியிலே யாதவனாய்க் கிருஷ்ணனாகத்
தானுத்து வந்திருந்தாய்த் தரணிவாழ்க
சோதனைகள் பார்த்திடுவோர் துதிப்போர் தம்மைத்
துஷ்டரையும் வதைசெய்து லோகமாள்வாய்
ஆதிமுத லோரெழுத்தேநீ கெருடன் மீதில்
அன்புடனே ஏறிவந்தருள் செய்வாயே. 9

மாயவனே ரகுராமா அருகேவாவா
வஞ்சனைகள் பறந்தோட நெஞ்சில்வாவா
காயாம்பூ நிறமுடனே கனவில் வாவா
கருமுகில்மேனியனே என்கருத்தில் வாவா
நாயகனே யென்னாவிருக்க வாவா
நாள்தோறு முன்பாதந்துதிக்க வாவா
ஆயர்குலத் துதித்தவனே கெருடன்மீதில்
அன்புடனே ஏறிவந்தருள் செய்வாயே 10

முப்புரத்தை யெரித்தவனே இப்போவாவா
முகில்நிறனே ஜெகந்நாதா முன்னேவாவா
எப்பொழுதுந் துதிப்பவர் பங்கில்வாவா
ஏழைபங்கி லிருப்பவனே இறங்கிவாவா
ஒப்பிலா மணிவிளக்கே யொளிபோல்வாவா
ஓம்நமோ.நாராயணா வுகந்துவாவா
அப்பனே ரகுராமா கெருடன்மீதில்
அன்புடனே ஏறிவந்தருள் செய்வாயே 11
துளபமணி மார்பழகா சுகத்தைத்தாதா
சுருதியே மெய்ப்பொருளே வரத்தைத்தாதா
களபகஸ்தூரியனே கடாட்சந் தாதா
கஞ்சனை முன்வென்றவனே கருணை தாதா
பரம்பொருளே சிவஜோதி பாக்கியந்தாதா
பக்திமுக்தி சித்திசெய்யவுன் பாதந்தாதா
அளவிலா மெய்ப்பொருளே கெருடன்மீதில்
அன்புடனே ஏறிவந்தருள் செய்வாயே 12

# 15. கோளறு பதிகம்

அருளியர் : திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

(திருமறைக்காடு)

அறுபத்து மூன்று நாயன்மார்களில் முதலாவதாக வைத்துப் போற்றப்படும் திருஞான சம்பந்தரும், 'அப்பர்' என்று உயர்ந்த நிலையில் வைத்து அழைக்கப்படும் திருநாவுக்கரசரும் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் சமகாலத்தில் வாழ்ந்து சைவசமயத் தொண்டாற்றியவர்கள். இளமையில் சமணராயிருந்து, தன் தமக்கை திலகவதியாரால் சைவத்திற்குத் திரும்பித் தொண்டாற்றி வந்தார், திருநாவுக்கரசர். இதனைக் கேள்வியுற்ற, காஞ்சி மாநகரினைத் தலைநகராகக் கொண்டு அட்சிபுரிந்து வந்த சமண சமயத்தைத் தழுவிய பல்லவ மன்னன் முதலாம் மகேந்திரவர்மன், திருநாவுக்கரசுக்கு பல இன்னல்கள் செய்தான். கொடிய நீற்றறைக்குள் (சுண்ணாம்பு சுடும் அறை) அடைத்து வைத்தும், விஷம் கலந்த உணவு அளித்தும், யானையை ஏவிவிட்டும், கல்லினில், கட்டி கடலில் எறிந்தும் திருநாவுக்கரசரைக் கொல்ல முயன்றான். ஒவ்வொரு முறையும் சிவபெருமானைத் துதித்து பதிகம் பாடி திருநாவுக்கரசர் துன்பங்களிலிருந்து விடுதலை பெற்றார். தொடர்ந்து சமயத் தொண்டாற்றி வந்த திருநாவுக்கரசருடன் இணைந்து திருஞானசம்பந்தரும், திருமறைக்காட்டில் (வேதாரண்யம்) தங்கியிருந்தார். அந்த சமயத்தில் மதுரைமாநகரை ஆண்ட கூன்பாண்டியர் என்னும் பாண்டிய மன்னன் சமண சமயத்தைத் தழுவியதால், மக்களும் அதேவழியில் சென்று சமணம் தழைத்தோங்கியது. பாண்டிய மன்னனின் துணைவியாரும், சோழ அரசனின் மகளுமாகிய மங்கையர்க்கரசியார் சைவ நெறிபிறழாமல் வாழ்ந்து வந்ததால் மன்னனின் நிலைகண்டு மனம் வருந்தி, அமைச்சரும், சைவப்பற்று மிக்கவருமானகுலச்சிறையாரிடம், திருஞான சம்பந்தப் பெருமானை மதுரைக்கு அழைத்துவர ஏற்பாடு செய்யுமாறு கூறினார். அமைச்சரும் சேவகர்களை அனுப்பி பெருமானை அழைத்துவரப் பணித்தார்.

திருமறைக்காட்டிற்கு வந்த பாண்டிய அமைச்சரின் சேவகர்கள், திருஞானசம்பந்தரிடம் பாண்டிய மன்னனின் நிலை பற்றியும், சமண சமயத்தால் நாட்டில் நிலவும் தீவிர நிலையையும், அரசியாரின் விருப்பத்தையும் கூறினர். நாட்டின் நிலையால் மனம் வருந்திய ஆளுடைய பிள்ளையாரென போற்றப்படும் திருஞானசம்பந்தர், வாகீசப்

பெருமானாகிய திருசாவுக்கரசரையும் கலந்து ஆலோசனை செய்தார். திருநாவுக்கரசரும் நாட்டின் நிலை குறித்து வருந்தினார். ஆனாலும் உடனே மதுரயம்பதிக்குச் செல்ல வேண்டாமெனக் கூறி சமணர்கள் தனக்குச் செய்த துன்பங்களையெல்லாம் விளக்கினார். மேலும் அந்தச் சமயத்தில் நாளும் கோளும் நலிவடைந்திருப்பதால், திருஞானசம்பந்தருக்கும் தீங்குகள் ஏற்படக்கூடும் எனவும் அஞ்சுவதாகக் கூறினார். திருஞானசம்பந்தப் பெருமான், திருநாவுக்கரசரின் அன்பினால் நெகிழ்ந்து உருகினார். பிறகு அவரிடம் சிவபெருமானின் அடியார்க்கு நாளும் கோளும் எப்போதும் நன்மையே அளிக்கும் எனக்கூறி ஈசனைத் தியானித்து, 'வேயுறுதோளி பங்கன்' எனத் தொடங்கி, கோளறு பதிகம் பாடியருளினார். இதனால் மனநிறைவடைந்த திருநாவுக்கரசர் அவரை வாழ்த்தியனுப்பினார். திருஞானசம்பந்தரும் மதுரைசென்று, சமணர்களிடம் அனல் வாதம் மற்றும் புனல்வாதம் செய்து, மன்னனுக்கு ஏற்பட்ட கொடிய சூலை நோயைக் குணப்படுத்தியதுடன், மதுரையில் சிறிது காலம் தங்கி பாண்டிய மன்னனை மீண்டும் சைவத்திற்கு மாற்றி சைவசமயம் பெரிதும் தழைத்தோங்கச் செய்தார்.

இவ்வாறு திருநாவுக்கரசு நாயனாரின் நல்லன்பைப் பெற்று, திருஞானசம்பந்த நாயனாரால் அருளைப்பெற்ற கோளறு பதிகத்தில் பதினோரு திருப்பதிகங்கள் உள்ளன. கோள்களால் ஏற்படும் துன்பங்களனைத்தையும் அறுப்பதுவே கோளது பதிகம்.

ஒவ்வொரு திருப்பதிகத்திலும் சிவனருளால் ஏற்படும் நன்மைகளைக் கூறியுள்ளார் திருஞானசம்பந்தர். ஒன்பது கிரகங்களும் நலத்தையே செய்யும் என முதல் பதிகத்திலும். இருபத்தேழு நட்சத்திரங்களும் செய்யும் நன்மையை இரண்டாம் பதிகத்திலும், திருமகள், கலைமகள், துர்கை, பூமாதேவி, எட்டுதிக்குப் பாலகர்கள் தரும் நன்மைகளை மூன்றாம் பதிகத்திலும், யமன், அக்கினி, நோய்கள் இவற்றால் துன்பமுண்டாகாது என நான்காம் பதிகத்திலும், அசுரர், இடி, மின்னல், பூதங்கள் இவற்றால் தீமை இல்லை என ஐந்தாம் பதிகத்திலும், மிருகங்களால் துன்பமில்லை என ஆறாம் பதிகத்திலும், வெப்பம், குளிர்,வாதம், பித்தம் இவற்றால் நோய்கள் ஏற்படாது என ஏழாம் பதிகத்திலும், கடலாலும், வெள்ளத்தாலும் சேதமில்லை என எட்டாம் பதிகத்திலும், பிரம்மன், திருமால், வேதங்கள், தேவர்கள், காலங்களால் நன்மை வருமென ஒன்பதாம் பதிகத்திலும், திருநீறு,

மற்ற சமயத்தவர்களால் துன்பம் வாராத உறுதியளிக்குமென பத்தாம் பதிகத்திலும், இப்பதிகங்களைப் பாடிப் பாராயணம் செய்வதால் நவக்கிரகங்களும், நட்சத்திரங்களும், திதிகளும், எந்தத் துன்பத்தையும் அடியார்க்குத் தராமல், அவர்கள் உயர்ந்த நிலையை அடைந்திட உதவும் என்பது எமது ஆணை என பதினோராவது பதிகத்திலும் அற்புதமாக அருளிச் செய்தார் திருஞானசம்பந்த நாயனார்.

1962-ஆம் வருடம், பிப்ரவரி மாதம், ஐந்தாம் நாள் எட்டுகிரஹங்கள் ஒரே ராசியில் கூடி அமைந்தன. சமயப் பெரியோரும், சான்றோரும் உலகிற்கு இதனால் தீமைகள் விளையுமோ என அஞ்சியபோது, ஆன்மீகப் பெரியோர்களும் சமயச் சான்றோர்களும் கோளறு பதிகத்தினைப் பாராயணம் செய்யுமாறு பக்தர்களுக்கு ஆலோசனை கூறினார். அவ்வாறே ஆன்மீக அன்பர்கள் கோளறு பதிகத்தைப் பாராயணம் செய்து பெரும் பயன் அடைந்தார்கள்.

எனவே, மகிமை பொருந்திய, சொற்சுவையும், பொருட்சுவையும் மிகுந்த கோளறு திருப்பதிகத்தை அனைவரும் பாராயணம் செய்து, எம்பெருமான் அருளால் அனைத்து நலன்களையும் பெற்று ஆனந்தவாழ்வு பெற இறைவனை மனதார வேண்டுகிறோம்.

## நூல்

வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள்கங்கை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறுதிங்கள் செவ்வாய்புதன் வியாழன்வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே 1

என்பொடு கொம்பொடாமை இவைமார் பிலங்க
எருதேறி ஏழை யுடனே
பொன்பொதி மத்தமாலை புனல்சூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
ஒன்பதொ டொன்றொடேழு பதினெட்டொ டாறும்
உடனாய நாட்க ளவைதாம்
அன்பொடு நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே 2

உருவளர் பவளமேனி ஒளிநீ றணிந்து
உமையோடும் வெள்ளை விடைமேல்
முருகலர் கொன்றை திங்கள்முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
திருமகள் கலையதூர்தி செயமாது பூமி
திசை தெய்வ மான பலவும்
அருநெறி நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே 3

மதிநுதல் மங்கையோடு வடவா லிருந்து
மறையோது மெங்கள் பரமன்
நதியொடு கொன்றைமாலை முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
கொதியுறு காலன்அங்கி நமனொடு தூதர்
கொடுநோய்க ளான பலவும்
அதிகுணம் நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே 4
நஞ்சணி கண்டனெந்தை மடவாள் தனோடும்
விடையேறு நங்கள் பரமன்
துஞ்சிருள் வன்னிகொன்றை முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
வெஞ்சின அவுணரோடும் உருமிடியும் மின்னும்
மிகையான பூதம வையும்
அஞ்சிடும் நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே 5
வாள்வரி அதளதாடை வரிகோ வணத்தர்
மடவாள் தனோடும் உடனாய்
நாள்மலர் வன்னிகொன்றை நதிசூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
கோளரி உழுவையோடு கொலையானை கேழல்
கொடுநாக மோடு கரடி
ஆளரி நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே 6

செப்பிள முலைநன்மங்கை ஒருபாக மாக
விடையேறு செல்வ னடைவார்
ஒப்பிள மதியும்அப்பும் முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
வெப்பொடு குளிரும்வாத மிகையான பித்தும்
வினையான வந்து நலியா
அப்படி நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே 7

வேள்பட விழிசெய்தன்று விடைமே லிருந்து
மடவாள் தனோடும் உடனாய்
வான்மதி வன்னிகொன்றை மலர்சூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
ஏழ்கடல் சூழிலங்கை அரையன் றனோடும்
இடரான வந்து நலியா
ஆழ்கடல் நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே 8

பலபல வேடமாகும் பரனாரி பாகன்
பசுவேறும் எங்கள் பரமன்
சலமக ளோடெருக்கு முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
மலர்மிசை யோனுமாலும் மறையோடு தேவர்
வருகால மான பலவும்
அலைகடல் மேருநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே 9
கொத்தலர் குழலியோடு விசையற்கு நல்கு
குணமாய வேட விகிர்தன்
மத்தமும் மதியும்நாக முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
புத்தரொ டமணைவாதில் அழிவிக்கும் அண்ணல்
திருநீறு செம்மை திடமே
அத்தகு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே 10

தேனமர் பொழில்கொள் ஆலை விளைசெந்நெல் துன்னி
வளர்செம்பொன் எங்கும் திகழ
நான்முகன் ஆதியாய பிரமா புரத்து
மறைஞான ஞான முனிவன்
தானுறு கோளும் நாளும் அடையாரை வந்து
நலியாத வண்ணம் உரைசெய்
ஆனசொல் மாலையோதும் அடியார்கள் வானில்
அரசாள்வர் ஆணை நமதே. 11

- திருச்சிற்றம்பலம் -

# 16. உலகநீதி

## இயற்றியவர் உலகநாத பண்டிதர்

இருபத்தோராவது நூற்றாண்டை வரவேற்கும் இப்பூலகம் எவ்வளவுதான் நவீன மயமாகிக் கொண்டு வந்தாலும், புதுமைகள் பலவும் வாழ்வில் மாற்றங்களை ஏற்படுத்தினாலும் நம் முன்னோர்கள் வகுத்துச் சென்ற பல வாழ்க்கை நியதிகள் எக்காலத்திற்கும் ஏற்றவையாக இருப்பது நாம் பெருமைப்பட மட்டுமின்றி பின்பற்ற வேண்டிய கோட்பாடுகளுமாகும். அவற்றை எடுத்துக்காட்டுவதே இப்பகுதி.

ஔவையார் வாழ்ந்த காலத்திற்கு சற்றுப் பின்பு வாழ்ந்தவராகக் கருதப்படுபவர் உலகநாத பண்டிதர். அவர் இயற்றிய உலகநீதி என்ற நூலை இங்கே காணலாம். வாசிக்க எளிதாகவும், புரிந்து கொள்ள சுலபமாகவும் உள்ள இந்த நூலில் உள்ள உயர்ந்த கருத்துக்கள் வாழ்க்கையில் இன்றும் நாம் கடைபிடிக்க வேண்டியவை.

சிறந்த முருக பக்தராக விளங்கிய உலகநாத பண்டிதர், உலகநீதித் தத்துவங்களைத் தவறாமல் பின்பற்றுபவர்கள் எவ்வளவு புகழுடன் வாழ்வார் என்பதை இந்நூலின் வழியாகக் கூறியுள்ளார். உலகநீதிகளில் சிலவற்றினையாவது நாம் அனைவரும் பின்பற்றத் தேவையான மன உறுதியினைத் தந்தருளுமாறு மயில்வாகனப் பெருமானின் தாள் பணிந்ததுவேண்டுகிறோம்.

## நூல்

உலகநீதி புராணத்தை யுரைக்கவே
கலைகளாய் வரும் கரிமுகன் காப்பு

ஓதாம லொருநாளு மிருக்க வேண்டாம்
ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்
மாதாவை யொருநாளும் மறக்க வேண்டாம்
வஞ்சனைகள் செய்வா ரோடிணங்க வேண்டாம்
போகாத விடந்தனிலே போக வேண்டாம்
போகவிட்டுப் புறஞ்சொல்லித் திரிய வேண்டாம்
வாதாடுங் குறவரிட வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே 1

நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்லவேண்டாம்
நிலையில்லா காரியத்தைச் செய்ய வேண்டாம்
நஞ்சுடனே ஒருநாளும் பழக வேண்டாம்
நல்லிணக்க மில்லாரோ டிணங்க வேண்டாம்
அஞ்சாமற் றனிவழியே போக வேண்டாம்
அடுத்தவரை ஒருநாளும் கெடுக்க வேண்டாம்
மஞ்சாடும் குறவரிட வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே 2

மனம்போன போக்கெல்லாம் போக வேண்டாம்
மாற்றானை யுறவென்று நம்ப வேண்டாம்
தனந்தேடி உண்ணாமற் புதைக்க வேண்டாம்
தருமத்தை ஒருநாளும் மறக்கவேண்டாம்
சினந்தேடி அல்லலையுந் தேடவேண்டாம்
சினத்திருந்தார் வாசல்வழிச் சேரவேண்டாம்
வனந்தேடுங் குறவரிட வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே 3

குற்றம் மொன்றும் பாராட்டித் திரியவேண்டாம்
கொலைகளவு செய்வாரோ டிணங்க வேண்டாம்
கற்றவரை ஒருநாளும் பழிக்க வேண்டாம்
கற்புடைய மங்கையரைக் கருத வேண்டாம்

கொற்றவனோ டெதிர்மாறு பேச வேண்டாம்
கோயிலில்லா வூரில்குடியிருக்க வேண்டாம்
மற்றுநிக ரில்லாத வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே 4

வாழாமற் பெண்ணை வைத்துத் திரிய வேண்டாம்
மனையாளைக் குற்றமொன்றுஞ் சொல்ல வேண்டாம்
வீழாத படுகுழியில் வீழ வேண்டாம்
வெஞ்சமரிற் புறங்கொடுத்து மீள வேண்டாம்
தாழ்வான குலத்ததுடனே சேரவேண்டாம்
தாழ்ந்தவரைப் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்
வாழ்வாருங் குறவரிட வள்ளிபங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே 5

வார்த்தைசொல்வார் வாய்பார்த்துத் திரிய வேண்டாம்
மதியாதார் தலைவாசல் மிதிக்க வேண்டாம்
மூத்தோர்சொல் வார்த்தைகளை மறக்க வேண்டாம்
முன்கோபக் காரரோ டிணங்க வேண்டாம்
வாத்தியார் கூலியை வைத்திருக்க வேண்டாம்
வழிமறித்துத் திரிவாரோ டிணங்க வேண்டாம்
சேர்ந்த புகழாள னொரு வள்ளிபங்கன்
திருக்கை வேலாயுதனைச் செப்பாய் நெஞ்சே 6

கருதாமற் கருமங்கள் முடிக்க வேண்டாம்
கணக் கழிவை ஒருநாளும் பேசவேண்டாம்
பொருவார் தம்போர்க்களத்தில் போகவேண்டாம்
பொதுநிலத்தில் ஒருநாளும் இருக்கவேண்டாம்
இருதார மொருநாளும் தேட வேண்டாம்
எளியாரை எதிரிட்டுக் கொள்ள வேண்டாம்
குருகாரும் புனங்காக்கும் ஏழை பங்கன்
குமரவேள் நாமத்தைக் கூறாய் நெஞ்சே 7

சேராத விடந்தனிலே சேர வேண்டாம்
செய்த நன்றி ஒருநாளும் மறக்க வேண்டாம்
ஊரொடுங் குண்டுணியாய்த் திரியவேண்டாம்
உற்றாரை உதாசினங்கள் சொல்ல வேண்டாம்
பேதான காரியத்தைத் தவிர்க்க வேண்டாம்
வினைபட்டுத் துணைபோய்த் திரியவேண்டாம்
மாதாடுங் குறவரிட வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே 8

மண்ணின்று பெண்ணோரஞ் சொல்ல வேண்டாம்
மனஞ்சலித்துத் திடுக்கிட்டுத் திரியவேண்டாம்
கண்ணழிவு செய்து துயர் காட்ட வேண்டாம்
காணாத வார்த்தையைக் கட்டுரைக்க வேண்டாம்
புண்படவே வார்த்தைகளைச் சொல்ல வேண்டாம்
புறஞ்சொல்லித் திரிவாரோ டிணங்க வேண்டாம்
மண்ணளந்தார் மருமகனார் மைந்த னென்கோன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே 9

புறம்பேசித் திரிவாரோ டிணங்க வேண்டாம்
வாதாடி வழக்குரைத்துச் சொல்ல வேண்டாம்
திறம் பேசிக் கலகமிட்டுத் திரிய வேண்டாம்
தெய்வத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம்
இறந்தாலும் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்
ஏசலிட்டு உற்றாரை நத்த வேண்டாம்
குலந்தனிலே வாழகின்ற வள்ளி பங்கன்
குமரவேள் நாமத்தைக் கூறாய் நெஞ்சே 10

அஞ்சுபேர் கூலியைக் கைக்கொள்ள வேண்டாம்
அதுவேது தம்பிரான் சொல்லைக் கேளாய்
தஞ்சமுடன் வண்ணான் நாவிதன் கூலி
சகலகலை யோதுவித்த வாத்தியார் கூலி
வஞ்சமற நஞ்சறுத்த மருத்துவச்சி கூலி
மகாநோய்தனைத் தீர்த்த பண்டிதன் கூலி
இன்சொலுட னிவர்கூலி கொடாத பேரை
ஏதேது செய்வானோ ஏமன் தானே. 11

## QUALITY, COMMITMENT, PRIDE & EXCELLENCE

**QUALITY :** Every job is a self-portrait of the person who did it. Many times, the difference in failure and success is doing something nearly right or doing it exactly right. Autograph your work with quality.

**COMMITMENT :** Commitment is what transforms a promise into reality. It is the words that speak boldly of your intentions and the actions which speak louder than words.

It is making the time when there is none. Coming through time after time, after time; Year after year, after year; Commitment is the stuff character is made of ; The power to change the face of things; It is the daily triumph of integrity over skepticism.

**PRIDE :** Pride is a personal commitment. It is an attitude which separates Excellence from Mediocrity.

It is that ingredient which inspires us not to get ahead of others, but rather to get ahead of ourselves.

**EXCELLENCE :** Going far beyond the call of duty, doing more than others expect.... This is what excellence is all about. And it comes from striving, maintaining the highest standards looking after the smallest detail, and going for the extra mile. Excellence means doing your very best, in everything in everyway.

## 1. இரண்டில் உள்ளது வாழ்க்கை

வருவதும், போவதும் - இரண்டு - இன்பம், துன்பம்
வந்தால் போகாதது - இரண்டு - புகழ், பழி .
போனால் வராதது - இரண்டு - மானம், உயிர்
தானாக வருவது - இரண்டு - இளமை, மூப்பு
நம்முடன் வருவது - இரண்டு - பாவம், புண்ணியம்
அடக்க முடியாதது - இரண்டு - பசி, தாகம்
நம்மால் பிரிக்க முடியாதது - இரண்டு - பந்தம், பாசம்
அழிவைத் தருவது - இரண்டு - பொறாமை, கோபம்
எல்லோருக்கும் சமமானது - இரண்டு - பிறப்பு, இறப்பு

-திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்

---

## 2. WINNERS Vs. LOSERS

The winner is always part of the answer
The loser is always part of the problem
The winner always has a programme
The loser always has an excuse
The winner says " Let me do it for You"
The loser says "That is not my job".
The winner sees an answer for every problem
The loser sees a problem for every answer
The winner says, 'it may be difficult, but it is possible'.
The loser says it may be pssible, but it is too difficult.

**BE A WINNER.**